# ஸ்ரீ ராமாநுஜன் 355



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
மஹாவித்வான் அண்ணங்கராசாரியர்

தொகுதி 30 | பிங்களஸ்ரீ மார்கழிமீ 10—1—1978 | பகுதி—7


# நாயனாத்மாச்ருதியும்-நந்தகோபரும்

ஸ்ரீராமாநுஜன் சென்றவிதழை மார்கழிமாதத் தொடக்கத்தில் வாசித்தீர்கள் இவ்விதழை மார்கழிமாத முடிவில் வாசிக்கிறீர்கள். *வேதமனைத்துக்கும் வித்தாகுங் கோதைதமிழில் ஓர் அரியபெரிய விருந்தையளிக்கிறோமிங்கு. ஐயைந்துமைந்துமான திருப்பாவையில் எத்தனை வ்யக்திகளின் ப்ரஸ்தாவமுள்ளதென்று பார்க்கவேணும். 1. நந்தகோபன். 2. யசோதைப்பிராட்டி. 3 கோயில்காப்பான். 4. தோரணவாசல் காப்பான். 5. நம்பிமூத்தபிரான். 6. நப்பின்னைப்பிராட்டி—என்றிங்ஙனே ஆறு வ்யக்திகளின் ப்ரஶம்ஸை காண்கிறோம். தேவகிப்பிராட்டியின் ப்ரஸ்தாவம் *ஒருத்தி மகனாய்ப் பிறந்தவென்றதில் கரந்துறைகின்றதிருக்கட்டும். இந்த வ்யக்திகளில் ப்ராதாந்யம் யாருக்கென்று பார்க்குமிடத்து, நந்தகோபர்க்கே உள்ளதாமது. எதனாலென்னில்; நந்தகோபர் ஐந்து பாசுரங்களில் ப்ரஶம்ஸிக்கப்பட்டுள்ளாரென்பது முதற் காரணம்; உபக்ரம-உபஸம்ஹாரங்களில் இவருடைய ப்ரஶம்ஸையேயென்பது இரண்டாவது காரணம் இவருடைய ப்ரஶம்ஸையுள்ள ஐந்து பாசுரங்களாவன;—1. கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன். 2. (16) *நாயகனாய் நின்ற நந்தகோபன். 3. (17) *அறஞ்செய்யுமெம்பெருமான் நந்தகோபாலன். 4 (18) ஓடாத தோள் வலியன் நந்தகோபாலன். 5. (21) ஏற்றகலங்களெதிர்பொங்கி மீதளிப்பமாற்றாதே பால்சொரியும் வள்ளல்பெரும் பசுக்களாற்றப்படைத்த நந்தகோபாலன். உபக்ரம உபஸம்ஹாரங்கள் நந்தகோபனுக்கே என்பதை முதற்பாசுரத்தினாலும் இருபத்தோராம் பாசுரத்தினாலுமுணரலாம். நந்தகோபருக்குண்டான ப்ராதாந்யம் இங்ஙனே நாம் திருப்பாவையினாலறிந்தது தவிர, பரம பக்தர்களின் வாசகத்தாலுமறிகிறோம். அது கேளீர். ஒரு மஹா பக்தருடைய சுலோகம்;—

*ச்ருதிமபரே ஸ்ம்ருதிமபரே பாரதமபரே பஜந்து பவபீதா:,
அஹமிஹ நந்தம் வந்தே யஸ்யாலிந்தே பரம் ப்ரஹ்ம* என்பது

(இதன் கருத்தாவது—) அவரவர்கள் பிறவிக்கடல் நீந்தவேண்டிக் காலக்ஷேபார்த்த மாக வேதங்களையும் வேதோப ப்ரும்ஹணங்களையும் கொள்க; எனக்கு அவை யொன்றும் வேண்டா. நந்தகோபாலன் திருவடிகளே சரணம் என்பதொன்றையே நான் தஞ்சமாகக் கொண்டவன்; அவற்றுக்குண்டான ஏற்றமென்னென்னில்;— [***யஸ்ய அலிந்தே பரம் ப்ரஹ்ம***] அலிந்தமென்கிற வடசொல்லுக்கு வாய்கொப்பளிக்கு மிடமான வாசல் தீராங்கியென்று பொருள். *வடதள தேவகீஜடரவேதசிர: கமலாஸ்தநசடகோபவாக்வபுஷி ரங்கக்ருஹே கிடந்தருளக் கடவதான பரப்ரஹ்மம் நந்தகோபருடைய மனைவாசற்கடையிலன்றோ விழுந்துருண்டு புரண்டு கிடந்தது! இத்தகைய பாக்கியம் வேறு யாருக்குண்டு? *தெய்வத் தேவகி புலம்பியபுலம்பல் பெருமாள் திருமொழியில் [*அபி க்ராவா ரோதிதி*] கல்லுங்கரையும்படியாகவன்றோ வுள்ளது. அதை நானும் அழுதுகொண்டே எடுத்துக்காட்டுகிறேன் — *நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள்கோன் வசுதேவன் பெற்றிலனே* திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாளே* *அளவில் பிள்ளைமையின்பத்தை யிழந்த பாவியேன் எனதாவி நில்லாதே!*

இங்ஙனேயான அதிசயம் நந்தகோபாலனுக்கு எங்ஙனே வாய்த்ததென்று விமர்சிக்க வேண்டாவா? விமர்சிப்போம். ச்ராவயதி பகவாந் பரமபுருஷ:*— *நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ ந மேதயா ந பஹுநா ச்ருதேந, யமேவைஷ வ்ருணுதே தேந லப்யஸ் தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்.* இந்த உபநிஷத் வாக்யத்தை ஸ்வாமி யெம்பெருமானார் ஸ்ரீபாஷ்யத்திலும் கீதாபாஷ்யத்திலும் அஸக்ருத் எடுத்தாளக் காண்கிறோம். இதில் *யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:* என்னுமது உயிரானது. [ஏஷ ஏவ யம் வ்ருணுதே தேந லப்ய ஏஷ: – பரம புருஷன்தானே யாவனொருவனை விரும்புகிறானோ அவனுக்குத்தான் அவன் எளியனவன்; எளியனவனென்பதுமட்டுமன்று; தான் விரும்பிப்பெற்ற அவனுக்குத் தன் திருமேனியை முற்றூட்டாக அநுபவிக்கவுங் கொடுப்பன் என்றபடி. வஸுதேவன் தனக்குப் பரமாத்மா பிள்ளையாகப் பிறக்கவேணுமென்று விரும்பினான்; அதுவே ஹேதுவாக அவனுக்குத் தன்னைக்காட்டி மறைந்தான். அவ்வளவேயா? பரமபுருஷன் தனது நிஜரூபத்தைக்காட்டிக்கொடுக்கச்செய்தேயும் *உபஸம்ஹர விச்வாத்மந்! ரூபமேதச் சதுர்ப்புஜம்* என்று 'மறைத்துக்கொள், மறைத்துக்கொள்' என்று வேண்டினான். அவ்வளவேயா? *வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோதகோ யயௌ* என்னும்படி கண்ணபிரானைப் பிறந்த க்ஷணத்திலேயே தானே சுமந்து கொண்டு யமுனையைக் கடந்து திருவாய்ப்பாடியிற் கொண்டுபோய்விட்டனன். வஸுதேவன் பண்ணின தபஸ்ஸு கண்ணனைப் பிள்ளையாகப்பெற்று முகத்திலே விழித்த வளவிலே உபக்ஷீணமாயிற்று. நந்தகோபன் ஸ்வப்ரவ்ருத்தி யொன்றிலும் மூண்டவனல்லன். ஆகவேதான் *யமேவைஷவ்ருணுதே* என்ற பரகத ஸ்வீகாரத்திற்குப் பாத்திரமாயினன். அவனும் அவன் தேவியும் சேர்ந்து அநுபவித்த அநுபவங்கள் வாசாமகோசரம். பகவானைப் பிள்ளையாகப் பெற்றவர்களில் யாரும் இவர்களின்

அநுபவத்தைப் பெற்றாரில்லை. *ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர்! நானே மற்றாருமில்லை* என்று பெருமைகொள்ளும் பாக்கியம் யசோதைக்கேயன்றோ வாய்த்தது. *யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:*என்றதற்கு வேறு சிலரும் லக்ஷ்யமாகக் கிடைப்பர்களாயினும் *தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்* என்றதற்கு நந்தகோபாலனொருவனேயன்றோ லக்ஷ்யமாகக் கடவன். நந்தகோபனைச் சொன்ன விடம் யசோதைக்கு முபலக்ஷணம். அவ்வநுபவ ப்ரகாரங்களைத் தாம் அநுபவித்துப் பேசும்பாக்கியம் ஆழ்வார்களுள் பெரியாழ்வாரொருவர்க்கே யன்றோ வாய்த்தது. அது கொண்டன்றோ ஆண்டாள் *போகத்தில் வழுவாத புதுவையர்கோன்* என்று திருத்தந்தையாரைச் சிறப்பித்துக் கூறியது.

## வஸுதேவ நந்தகோபர்களின் வாசியை வேதவாக்கியங்கொண்டு — சிறிது விளக்குவோம் —

தைத்திரீயோபநிஷத்தில் *அந்நவாந் அந்நாதோ பவதி* என்பதொரு வாக்கியம். தைத்திரீய ஸம்ஹிதையிலும் இரண்டாவது காண்டத்திலும் மூன்றாவது காண்டத்திலும் இங்ஙனே பிரியச்சொல்லியுள்ளது. அதில் இரண்டாவது காண்டம் இரண்டாவது ப்ரச்நத்தில் "அக்நயே அந்நவதே புரோடாசமஷ்டாகபாலம் நிர்வபேத்" என்று தொடங்கியுள்ள வாக்கியம் (அந்நவாநேவ பவதி) என்று முடிவடைகிறது. உடனே அங்கு (அக்நயே அந்நாதாய புரோடாசமஷ்டாகபாலம் நிர்வபேத்) என்று தொடங்கும் வாக்யம் (அந்நாத ஏவ பவதி) என்று முடிவடைகிறது. மூன்றாவது காண்டம் நான்காவது ப்ரச்நத்தில்—"அக்நீஷோமீயாமாலபேத" என்று தொடங்கும் வாக்யம் (*அந்நவாநேவாந்நாதோ பவதி) என்று முடிவடைகிறது. தைத்திரீயோபநிஷத்தில் *அந்நவாந் அந்நாதோ பவதி' என்று ஓதப்படுவது ஸுப்ரஸித்தம். ஆக இந்த வாக்யங்களில் அந்நவானாகக் கடவேன் என்கிற ஒரு ப்ரார்த்தனையும், அந்நாதனாகக் கடவேன்! என்கிற மற்றொரு ப்ரார்த்தனையும், அந்நவானாகிறான் என்கிற ஒரு பலச்ருதியும் அந்நாதனாகிறானென்கிற மற்றொரு பலச்ருதியும் காண்கிறது. இதைப்பற்றி இங்கு விமர்சிக்க விரும்புகிறோம்.

(அந்நவாந்) என்பதற்கு அன்னத்தை யுடையவன் என்று பொருள். (அந்நாத:) என்பதற்கு அன்னத்தை யுண்பவன் என்று பொருள். உலகில் பிறப்பவர்கள் அன்னத்தை விரும்புவது உண்பதற்காகத்தானே. அதற்காகத் தனிப்பட்ட ஒரு ப்ரார்த்தனையும் பலச்ருதியும் வேணுமோ? என்று சங்கிக்க நேரும். இதைப் பற்றித் தெளிவுபடுத்துவதற்காகவே இக்கட்டுரை எழுதப்படுகின்றது.

அன்னம் என்பதற்கு சோறு என்று மட்டும் பொருளன்று. நாம் அநுபவிக்கும் பொருள்கள் எல்லாவற்றையும் அந்தச் சொல்லுக்குப் பொருளாகக் கொள்ளலாம். அதாவது, அன்ன ஸாதனங்களையும் அன்னமென்கிற சொல்லால் கொள்ளலாமென்றபடி. முன்னம் சோறு என்கிற பொருளைமட்டும் வைத்துக்கொண்டு ஈண்டு விசாரம் நடத்துவோம். அன்ன முள்ளவர்களெல்லாரும் அன்ன முண்பவர்களாயு மிருக்கிறார்களென்பது கிடையாது. 'காவேரிப் பாசனத்தில் எமக்கு ஆயிரம்வேலி நிலமுண்டு; எனக்கு இரண்டாயிரம்வேலி நிலமுண்டு' என்பவர்களை மிகமிகக் காண்போம். அவர்

கள் அன்னவான்களென்பதில் ஐயமில்லை; ஆனால் அவர்களெல்லாரும் அன்னாதர்களுமாக இருக்கிறார்களா? என்று பார்ப்போமாகில் அன்னவான்களுக்கு அந்நாதத்வமும் கூடுவது சிறுபான்மையே யாகும். ஒருவர் சொல்லுவர்—எனக்கு ஜீரணசக்தி மிகவும் குறைவு; ஏதோ பாலும் பழமுந்தான் என்று மற்றொருவர் 'எனக்குப் பொரிக் கஞ்சியையே ஆஹாரமாக மருத்துவர் விதித்திருக்கிறார்' என்பர். இன்னொருவர் 'எனக்கு சப்பாத்திதான் சாப்பாடு' என்பர்; வேறொருவர் 'கடலைக் காயையே உண்டு வழக்கப்படுத்தி விட்டேன், ப்ரஸாதம் பிடிக்கவில்லை' என்பர். இப்படி பலவகைப் பேச்சுக்களைக் கேட்டிருக்கிறோம். முன்னோர்களும் இதையறிந்தே "போஜ்யம் போஜந சக்திச்ச நால்பஸ்ய தபஸ: பலம்" என்றார்கள். போஜ்ய வஸ்துக்கள் புஷ்கலமாயிருந்து போஜந சக்தியும் வாய்ப்பது அருந்தவப்பயன் என்றபடி.

தைத்திரீயோபநிஷத்தில் ஆனந்தவல்லியில் பரப்ரஹ்மத்தினுடைய ஆனந்தத்தைப் பேச அடியிட்ட வேதபுருஷன் முந்துற முன்னம் மநுஷ்யானந்தத்தைப் பேசவெழுந்து 'ஸைஷாநந்தஸ்ய மீமாம்ஸாபவதி" என்று தொடங்கி ஓதுகையில் ("ஆசிஷ்டோ த்ருடிஷ்டோ பலிஷ்ட:") என்று இவற்றையும் மநுஷ்யானந்தங்களில் சேர்த்து ஓதிற்று. இங்கு [ஆசிஷ்ட்ட:] என்பதற்கு பாஷ்யகாரர்கள் பலபொருள்கள் எழுதுகின்றார்கள். அவற்றுள் ஒரு பொருள் ["ஆசிஷ்ட்ட:—அசநசீல:"] நன்றாக உண்பவன் என்றபடி; இத்தால் உடலில் ரோகமொன்றுமில்லாமை சொன்னபடி—என்று விவரணம் செய்யப்பட்டுள்ளது. ஆக, கிடைத்த அன்னத்தை நோய் நொடியில்லாமல் பரிபூர்ணமாக அநுபவிக்கப் பெறவேண்டியதும் முக்கியமாதலால் அந்நவாந் என்றதோடு நிறுத்தாமல் " அந்நாத:" என்றும் சொல்ல வேண்டியதாயிற்று.

இது லௌகிகரீதியில் தெரிவிக்கப்பட்ட பொருள். இனி பரப்ரஹ்ம விஷயமான ஒரு சுவைப் பொருளை யறிவிக்கிறோம். ("அந்நம் ப்ரஹ்மேதி வ்யஜாநாத்") என்கிற ச்ருதியின்படி அன்னம் என்பதற்குப் பரமபுருஷன் என்று பொருள். அந்நவாந் என்பதற்குப் பரம புருஷனைப் பெறுகிறவனென்று பொருள்; அந்நாத: என்பதற்கு பெற்ற பரமபுருஷனை நன்கு அநுபவிப்பவனென்று பொருள். இவை யிரண்டும் ஒரு வ்யக்தியினிடத்தில் ஸம்பவிப்பது அரிதாதலால் இவற்றின் ஸாமாநாதிகரண்யத்தை வேதம் ஆசீர்வதிக்கின்றது. வஸுதேவர் அருந்தவப் பயனாக ஸ்ரீக்ருஷ்ணனை மகனாகப் பெற்றார். பெற்றவளவே யொழிய அநுபவிக்கப் பெற்றாரோ வென்னில்; அநுபவ பாக்யமெல்லாம் நந்தகோபர்க்கேயன்றோ ஆயிற்று. "நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள் கோன் வசுதேவன் பெற்றிலனே" என்று தெய்வத் தேவகி புலம்பினது ப்ரஸித்தமன்றோ. ஆக, பரப்ரஹ்மத்தைப் பெறுவதும் அதனை யநுபவிக்கப் பெறுவதுமான இரண்டும் ஒன்று கூடுவது அரிதென்று உணரப்பெறின் இவற்றின் ஸாமாநாதிகரண்யம் ஆசாஸ்யமாகுமென்னத் தட்டில்லை. அந்நவாந்—வஸுதேவர். அந்நாத: — நந்தகோபர். ... ... ... ... •

# திவ்யப்ரபந்தப் பகுதி

## ★ கூடாரை வெல்லுஞ் சீர்க்கோவிந்தன் ★

ஆரியர்காள்! இன்று இந்தத் திருப்பாவைப் பாசுரத்தை உலகமெல்லாம் அநுஸந்திக்கின்றது. மார்கழிமுப்பதும் அநுஸந்தித்தாலும் இது இன்றைய நாள் பாசுரமாதலால் இச் சொல்தொடரின் பொருளைச் சிறிது விவரிக்கின்றேன். **கூடாரை**—கூடாதவர்களை, **வெல்லும்**—வெற்றிகொள்ளவல்ல, **சீர்**—குணத்தையுடைய என்பது பதப்பொருள். உலகத்தில் ஒவ்வொருவர்க்கும் நண்பர், பகைவர், உதாஸீனர் என மூன்று வகுப்பினருண்டு. நண்பர்களை [நம்பக்கலில் அன்புள்ளவர்களை] கூடுமவர்களின் வகுப்பில் சேர்த்து, அன்பில்லாதவர்களான பகைவர்களையும் உதாஸீனர்களையும் கூடாதவர்களின் வகுப்பிலே சேர்த்துப் பேசுவது யாவருமறிந்ததாம். ஶௌர்ய வீர்யபராக்ரமங்களினால் பகைவரை வெல்லுவது இயல்பு. தசரதசக்ரவர்த்தி கைகேயியினிடத்தில் ஸ்ரீராமகுணப்ரபாவத்தைப் பேசுகையில் *ஸத்யேந லோகாந் ஜயதி தீநாந் தாநேந ரகவ:, குரூந் ஶுஶ்ரூஷயா வீரோ தநுஷா யுதி ஶாத்ரவாந்* என்கிறான். இராமபிரான் பகைவர்களை வில்லாலே வெல்பவன் என்றது நான்காவது பாதத்தில். வில்லாலே வெல்வதாவது பராக்ரமங்கொண்டு வெல்வதுதானே. கண்ணபிரானுக்கும் இந்த பராக்ரமமுண்டென்பதில் தட்டில்லையே. ஆக, **கூடாரை வெல்லுஞ் சீர்க்கோவிந்த**னென்றது—பகைவர்களைவெல்லும் பராக்ரம குணமுடைய கோவிந்தன் என்றதாயிற்று. இதற்குமேல் கேண்மின். **கூடார்** என்கிற சொல்லினால் பகைவரைக் கொள்வதுபோல அன்பர்களையும் உதாஸீனர்களையும் கொள்ளத்தடையில்லை.

ஆழ்வார்கள் எம்பெருமான் பக்கலில் அளவுகடந்த ப்ராவண்யமுடையவர்கள் என்பதில் ஐயமில்லை. அவர்கள் இரண்டு வகையினால் எம்பெருமானோடு கூடாதவர்களாகின்றனர். முதல்வகை—அருளிச்செயல் வியாக்கியானங்களிலே ***வளவேழுலகு தலையெடுத்து*** என்பதொரு ஸ்ரீஸூக்தியை ஸேவித்திருப்பீர்கள். *வளவேழுலகு தலையெடுப்பதாவது — நைச்சியங்கொண்டாடிப் பின்வாங்குதல். எம்பெருமானுடைய எல்லையற்ற பெருமையையும், தம்முடைய அத்தகைய தாழ்வையும் சிந்தித்து இப்பெரியோனை அணுகுவதற்கு நமக்கு என்னயோக்யதையுள்ளது! என்று விலகிப்போதல். திருவாய்மொழி நூற்றந்தாதியில் (5) *வளமிக்க மால் பெருமை மன்னுயிரின் தண்மை, உளமுற்று அங்கூடுருவவோர்ந்து, தளர்வுற்று நீங்கநினைமாறனை* என்றருளிச் செய்தபடி *அம்மானாழிப்பிரானவன் எவ்விடத்தான் யானார்!* என்கிற அநுஸந்தானம் தலையெடுத்துப் பின்வாங்குவதுண்டே—இதுவொரு கூடாமை. இதனால், கூடார்திரளில் ஆழ்வாரும் சேர்ந்தவராகிறார். ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்நத்தில் *பவந்தமேவாநுசரந் நிரந்தரம்* என்கிற சுலோகத்தினால் எம்பெருமானோடு அநவரதமும் கூடியேயிருக்கவேணுமென்கிற ஆசையை வெளியிட்டவர், உடனே தம்முடைய நைச்சியத்தைச் சிந்தித்து *திக் அசுசிம் அவிநீதம் நிர்தயம் மாம்

அலஜ்ஜம்* என்கிற அடுத்த சுலோகத்தினால் 'எம்பெருமானோடு கூடுவதற்கு நான் அர்ஹனல்லேன்' என்று கூறும் முகத்தால் தம்மைக் கூடாதார் திரளிலே ஆக்கிக் கொண்டார். இப்படிப்பட்டவர்களை எம்பெருமான் வெல்லுவது (தனக்காக்கிக்கொள்வது) எங்ஙனே யென்னில், தனது சீலகுணத்தைக் காட்டியாம். சீலமாவது ஸௌசீல்யம்; *மஹதோ மந்தைஸ் ஸஹ நீரந்த்ரேண ஸம்ச்லேஷ: ஸௌசீல்யம்* என்பது தான் சீலம். கீழே யெடுத்துக்காட்டிய திருவாய்மொழி நூற்றந்தாதிப் பாசுரத்தில் *நீங்கநினை மாறனைமால் நீடிலகுசீலத்தால் பாங்குடனே சேர்த்தான் பரிந்து* என்றருளிச்செய்தது காண்க.

பக்தர்கள் மற்றுமொருவகையினாலும் கூடாதாராகிறார்கள். ஆழ்வார்கள் ஸ்த்ரீ பாவனைகொண்டு பேசுமிடத்து ப்ரணய ரோஷத்தினால் 'உன்னுடனே கூடேன்' என்று சொல்லிக் கதவடைத்துத் தள்ளுவது ஒரு விலக்ஷணாநுபவம். இதனை, நம்மாழ்வார், குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிற மூவர் திருவாக்குக்களிலே அற்புதமாகக் காணாநின்றோம். திருவாய்மொழியில் (6-2.) ***மின்னிடை மடவார்கள்** பதிகம். குலசேகராழ்வார் (பெருமாள்) திருமொழியில் (6) ***ஏர்மலர்ப் பூங்குழல் பதிகம்.** திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (10—8.) *காதில் கடிப்பிட்டுப் பதிகம் இம்மூன்று பதிகங்களிலும் சிற்சில பாசுரங்கள் கேளீர்; மின்னிடைமடவார்பதிகத்தில், *என்னுடைய பந்துங்கழலும் தந்துபோகு நம்பீ! *கழகமேறேல் நம்பீ!* என்னைமார் தன்மபாவ மென்னார் ஒருநான்று தடிபிணக்கே;* பெருமாள் திருமொழிப் பதிகத்தில் *என்னுக்கவளைவிட்டிங்கு வந்தாய்? இன்னமங்கே நட நம்பி! நீயே* எற்றுக்கு நீ யென்மருங்கில் வந்தாய்? எம்பெருமான் நீ யெழுந்தருளே* பொய்யொருநாள்பட்டதே யமையும் புள்ளுவம் பேசாதே போகு நம்பீ!*—பெரிய திருமொழிப்பதிகத்தில்—*போதுமறித்துப் புறமேவந்துநின்றீர் ஏதுக்கிதுவென் இதுவென்னிது வென்னோ?* *சுவரார்கதவின்புறமே வந்துநின்றீர் இவராரிதுவென் இதுவென்னிது வென்னோ? *முற்றம்புகுந்து முறுவல்செய்து நின்றீர் எற்றுக்கிதுவென்? இதுவென்னிதுவென்னோ?* ஆக, ப்ரணய ரோஷத்தினால் கூடாதாராகை இதுவாம். திருவாய்மொழி நூற்றந்தாதியில் *மின்னிடைமடவர் பதிகத்திற்கு இட்டருளின பாசுரத்தில் *மின்னிடையார் சேர்கண்ணன் மெத்தென வந்தானென்று, தன்னிலைபோய்ப் பெண்ணிலையாய்த் தான்தள்ளி—உன்னுடனே கூடேனென்று ஊடுங் குருகையர்கோன் ......* என்றருளியது காண்க. இங்ஙனே ப்ரணயரோஷத்தாலே கூடாரை வெல்வது அநுநயத்தாலே. இவர்கள் அவனிடத்தே காட்டும் நைச்சியத்தை அவன்தான் இவர்கள் பக்கலிலே காட்டி 'அடியேன் குடியேன்' என்றாற்போலே சில சொல்லி மயக்கி வலைப்படுத்திக் கொள்வனாயிற்று. இவ்வகையநுபவங்கள் கண்ணபிரானோடேயாகுமத்தனைபோக்கி, இராமபிரானிடத்தில் இதற்கு ப்ரஸக்தியேயில்லை. இவ்வநுபவத்தை கீதகோவிந்தத்திலும் காணலாம். '*ச்லிஷ்யதி காமபி பச்யதி காமபி சும்பதி காமபி ரமயதி காமபி ராமாம்* என்றார் அஷ்டபதியில். ஆக, ***கூடாரை வெல்லுஞ் சீர்க்கோவிந்தன்**' என்றதற்கு —மாச்சரியத்தாலே கூடாதவர்களை வெல்லுங் குணம் பராக்ரமம்; நைச்யாநுஸந்தானத்தாலே கூடாதவர்களை வெல்லுங் குணம்—ஸௌசீல்யம். ப்ரணயரோஷத்தாலே கூடாதவர்களை வெல்லுங்குணம்—அநுநயம். ஔதாஸீந்யத்தாலே கூடாதவர்களை வெல்லுங்குணம்—வடிவழகு. இவற்றையுடைய கோவிந்தனே! என்று விளித்தபடி.

# திருப்பாவைக்கு முற்காலமும் இக்காலமும்

மார்கழித்திங்களில் திருப்பாவைகாலக்ஷேப மென்பது முற்காலத்தில் எங்ஙனே யிருந்ததென்றால், ஆசாரியர்கள் அருளிச்செய்த மூவாயிரப்படி, ஆறாயிரப்படிவியாக்கியானங்களை ப்ரவசனம் செய்யும் வகையில் நடந்துவந்தது. அந்த பத்ததி முந்தின நூற்றாண்டு முடிவுவரையில் ஆங்காங்கு திவ்யதேசங்களில் வழுவாது நடைபெற்று வந்தது இந்த நூற்றாண்டில் அந்தபத்ததி சிற்சில ஸ்தலங்களில் [ஜீயர் ஸ்வாமிகளின் மடங்களில்] காணலாயிருக்குமோ என்னவோ? பெரும்பாலும் உபந்யாஸரூபமாகவே திருப்பாவையநுபவம் எங்கும் நடந்து வருகிறது. ப்ராசீன ரீதியான காலக்ஷேபத்தில் யாரோ சிலர் மட்டுமே அந்வயிக்க ப்ராப்தமாகும். (திருப்பாவை 12 பா) *அனைத்தில்லத்தாருமறிந்து* என்றது இக்காலத்தில்தான் அந்வர்த்தமாகின்றது. நகரங்கள், அக்ரஹாரங்கள், க்ராமங்கள் என்கிற வாசியில்லாமல் எங்கும் [ஓரூரில் பல விடங்களிலும்] திருப்பாவை யுபந்யாஸங்கள் நடைபெற்று வருவதனால் இதுவொரு நல்லடிக் காலமென்றே சொல்லவேணும்.

இந்த ஸந்தர்ப்பத்தில் அடியேன் ஒன்று விஜ்ஞாபிக்கவேண்டியதாகிறது. அடியேன் 1916ஆம் வருடத்தில் திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையுரை எழுதி வெளியிடத் தொடங்கினேன். அதை ஒவ்வொரு பிரபந்தமாக முடித்து வெளியிடாமல் மாதந்தோறும் ஸஞ்சிகையாக வெளியிட்டு வந்தேன். அப்போது ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி வானமாமலை சின்னகலியன் ஸ்வாமி எழுந்தருளியிருந்தார். அவருடைய ஸந்நிதிக்குச் சில ஸஞ்சிகைகள் அனுப்பி மங்களாசாஸனம் செய்தருளவேணுமென்று பிரார்த்தித்திருந்தேன். ஸ்வாமி கடாக்ஷித்தருளி, திருவுள்ளத்தில் சிறிது சீற்றங்கொண்டு ஒரு ஸ்ரீமுகம்வரவிட்டருளினார்; (இப்போது வானமாமலையில் பெரிய ஸ்வாமியாக ஸேவை ஸாதித்தருளும் ஸ்ரீமத் பரமஹம்ஸ. சின்ன ராமாநுஜன் ஸ்வாமி திருவெழுத்தாகக் கிடைத்தது.) அதில் நியமனமென்னவென்றால், "இந்த தீபிகையுரையைத் தொடர்ந்து நடத்தவேண்டாம். இதனால் பூருவாசாரியர்களின் வியாக்கியானத்திற்குப் பிரசாரமில்லாமற் போய்விடும். அந்தவியாக்கியானங்களை மேன்மேலும் பதிப்பிக்கவேண்டியது. உம்முடைய தீபிகையுரையை நிறுத்த வேண்டியது" என்று கடுமையாக நியமனமாகியிருந்தது. அப்போது, திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழிகளின் உரைமுடிவுபெற்று திருப்பாவை திவ்யார்த்ததீபிகையும் எழுதி முடிந்து அது அச்சாகி வருகின்றது. ஸ்வாமி நியமனப்படி நிறுத்திவிடுவதா? என்கிற ஆலோசனையில் ஒன்றும் தோன்றாமல் சில நாட்கள் திகைத்திருந்தேன். அச்சாகிவருகின்ற திருப்பாவை யுரையை முடித்து வெளியிட்டுவிடுவோம்; மேற்கொண்டு செய்யவேண்டியதைப் பிறகு நிஷ்கர்ஷிப்போமென்று முடிவுசெய்துகொண்டு திருப்பாவைதீபிகையை ஸ்ரீஸ்வாமி ஸந்நிதிக்குப் போகவிட்டேன். மேற்கொண்டு தொடர்ந்து நடத்துவதில்லையென்றும் விஜ்ஞாபித்திருந்தேன். ஸ்ரீ ஸ்வாமி அவ்வுரையை முழுவதும் கடாக்ஷித்தருளி நாலைந்து நாளைக்குள் நியமித்தருளினதாவது, "நிறுத்த வேண்டாம், தொடர்ந்து எழுதியச்சிட்டு முடிக்கவேண்டியது. இந்த தீபிகையுரை உலகுக்கெல்லாம் மிகவும் உபகாரகமாகவே யிருக்கும், பூர்வாசார்ய வியாக்கியானங்களுக்கும் கவசமிட்டாப்போலவே ரக்ஷையாகவேயிருக்கும்" இத்யாதி.

ஸ்ரீஸ்வாமியின் இத்தகைய அநுக்ரஹ விசேஷத்தினுலேயே அது இடையூறின்றி இனிது முடிவுபெற்று, மேன்மேலும் பலபல பதிப்புகளும் ஏறி, தமிழில் மட்டுமன்றிக்கே ஸம்ஸ்க்ருதம் ஹிந்தீ தெலுங்கு பாஷைகளிலும் பிரசுரமாகியுள்ளன. இவற்றால் உலகமடையும் பேருதவியை நிர்மத்ஸரர்கள் நிச்சலும் ஸமக்ஷத்திலும் பரோக்ஷத்திலும் தெரிவித்துவருகிறார்கள். இதை மனமகிழ்ச்சியுடன் விஜ்ஞாபித்து நிற்கிறேன்.

## பண்டிதர் பகுதி

நமது ஸ்ரீராமாநுஜனில் இங்ஙனேயொரு பகுதியை இன்றாக அமைக்கின்றோம். ஸம்ஸ்க்ருதசாஸ்த்ர பரிச்ரமமுள்ள பண்டிதர்களின் ஆராய்ச்சிக்குரிய விஷயங்கள் இப்பகுதியில் இடம்பெறுமென்க. திருவல்லிக்கேணியில் ஒருவைச்யசாரிடியின் மூலமாக "150th year commemorative souvenir" 11—12—1977ல் வெளிவந்துள்ளது. இம்மலரில் ஆங்கிலம், தமிழ் ஸம்ஸ்க்ருதம் ஆக மூன்று பாஷைகளிலும் சிலருடைய கட்டுரைகள் வெளியிடப்பட்டுள்ளன ஸ்ரீமதுபயவே. உபந்யாஸக மணி முக்கூர். லக்ஷ்மீந்ருஸிம்ஹாசார்யருடைய ஸ்ரீதேசிகவைபவ பரமான வியாஸமொன்று வெளிவந்துள்ளது. ஆசார்யசம்புவின் ப்ரக்ரியையிலே அழகாக எழுதப்பட்டுள்ளது. முடிவில் ஸ்ரீஸ்வாமி அருளிய கிரந்தங்கள் என்று மகுடமிட்டு க்ரந்தங்களின் திருநாமங்களையெழுதிவருகையில் காவ்யவகுப்பில் நான்காவது க்ரந்தமாக ஸமஸ்யாஸஹஸ்ரீ என்றெழுதப் பட்டுள்ளது. பலவாண்டுகட்குமுன் (Late) திருவஹீந்திரபுரம் சேட்லூர் – நரஸிம்ஹாசாரியார் ஸ்வாமியும் இப்படியெழுதி அச்சிட்டிருந்தார். அப்போது நாம் "இது ஸ்வாமி தேசிகனுடைய பிருதமேயொழிய க்ரந்தத்தின் பெயரன்று" என்றுவிரிவாகவிளக்கியெழுதியிருந்தோம், அவர்தெளிவுபெற்று க்ஷாமணபத்ரிகையெழுதியிருந்தார். சததூஷணீ, பஞ்சலக்ஷணீ, சதுர்த்தசலக்ஷணீ என்று சிலக்ரந்தங்களின் பெயர்கள் வழங்குவதுபோல ஸமஸ்யாஸஹஸ்ரீ என்று க்ரந்த நாமம் வழங்குவதாகப் பலருடைய மருள். த்விகுஸமாஸமானல் த்ரிலோகீ பஞ்சவடீ சதுச்ச்லோகீ அஷ்டச்லோகீ இத்யாதிகள்போலே ஈகாராந்தமாக வரும். *ஸங்க்யாபூர்வோ த்விகு:* என்று அநுசாஸநமாகையாலே ஸங்க்யாவாசகமான சப்தம் பூர்வத்திலிருக்க வேண்டும். சததூஷணீ இத்யாதிகள் ஸங்க்யாபூர்வகமாயிருப்பது காண்க. ஸமஸ்யா ஸஹஸ்ரீ என்பது நகாராந்தசப்தமேயொழிய ஈகாராந்தசப்தமன்று. ஸ்வாமி தேசிகன் தாமே ஸ்தோத்ரபாஷ்ய ஸமாப்தியில் *அகணி ஸதஸி ஸத்பி: யஸ் ஸமஸ்யா ஸஹஸ்ரீ கவிகதகம்ருகேந்த்ரஸ் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர:* என்றருளியுள்ளார் ஸதஸ்யர்கள் தம்மை ஸமஸ்யாஸஹஸ்ரியென்று கொண்டாடினதாகக் கூறினபடி. அதை இந்த கட்டுரைகாரர் தெரிந்து கொள்ளாமலில்லை. ஆனாலும் கைப்பிசகாக இதுக்ரந்த நாமதேயமாக விழுந்திருக்கலாம்

மற்றொன்று; ரக்ஷாக்ரந்தங்கள் என்றொரு மகுடமிட்டு, ஸச்சரித்ர ரக்ஷாதிகளோடொக்க ரஹஸ்யரக்ஷா என்றொரு க்ரந்தமும் ஸ்வாமி ஸாதித்தருளினதாக எழுதியுள்ளார்; பலர் இங்ஙனே மருண்டிருப்பதுண்டு. ஸ்தோத்ரபாஷ்யம் சதுச்ச்லோகீ பாஷ்யம், கத்யபாஷ்யம்...... இத்தகைய க்ரந்தங்களுக்கு ரஹஸ்யரக்ஷா என்பது ஸமுதாயநாமமேயொழிய அதுவொரு தனிப்பட்டநூலன்று. பெரியார்களைக் கேட்டுத் தெளிவது. இங்ஙனே நாம்தெரிவிப்பதை தோஷோத் காடநபுத்தியினுலென்று கொள்ளாதே தத்வோத்போதநருசியினு லென்று கொள்ளவேணும். —*P. B. A.*

உபந்யாஸக ஸௌபாக்யமாலை (முன் தொடர்ச்சி)

# 9. காதல் அன்பு வேட்கை அவா

ஒருவிஷயத்திலே ஆசையுண்டானால் அவ்வாசையைச் சொல்லும் சொற்கள் பலவுள்ளன. தென்மொழியிலும் பலவுள. வடமொழியிலும் பலவுள. காதல் அன்பு வேட்கை அவா என்பவை தமிழ்ச்சொற்கள். ஸங்கம் காமம் அநுராகம் ஸ்நேஹம் என்பன ஸம்ஸ்க்ருத சப்தங்கள். 'இவை பரஸ்பரம் பர்யாய பதங்களேயன்றி இவற்றில் பொருள் வாசியில்லை' என்றே பொதுவாகப் பலரும் நினைத்திருப்பது. இலக்கிய நூல்களை நோக்குமிடத்து இச்சொற்கள் கலசிக் கலசி வருவனவாகக் காண்கையாலே, காதல் என்றாலும் ஆசைதான் வேட்கையென்றாலும் ஆசைதான் அன்பு என்றாலும் ஆசைதான்; அவா என்றாலும் ஆசைதான் என்று கொள்வதற்குக் குறைவில்லாமலிருக்கிறது, இப்படியே ஸங்கம் காமம் அநுராகம் ஸ்நேஹம் என்கிற ஸம்ஸ்க்ருத பதங்களையும் பரஸ்பர பர்யாயங்களாகக் கொள்வதற்கு ஸம்ஸ்க்ருத லக்ஷ்யங்களில் ஔசித்யம் தெரிய வருகிறது.

ஆனால் நம் ஆசாரியர்கள் இவற்றில் அவஸ்தாபேதத்தையிட்டுப் பொருள் வாசியைக் காட்டுகின்றார்கள், இதை விவரிப்பதற்கு முன்னம் ஒன்று தெரிவிக்கிறோம். அமரகோசத்தில் ''ரம்பா து கதலீ மோசா'' என்று வாழைக்குப் பர்யாய நாமங்கள் படிக்கப்படுகின்றன. இப்படியே ''ஆம்ரச் சூதோ ரஸாலோஸௌ'' என்று மாமரத்திற்குப் பர்யாய நாமங்கள் படிக்கப்படுகின்றன. கொட்டை வாழை, பேயன் வாழை, பச்சை வாழை, இலை வாழை......என்று பலவாசிகள் வாழையிலுள்ளன. மாமரத்திலும், தேன்மா ஒட்டுமா நீலம் என்று பல வாசிகளிருக்கின்றன. இந்த ஜாதிபேதங்களுக்கு ஏற்பவே நிகண்டுகளில் நாமபேதங்கள் ஏற்பட்டிருக்கின்றனவென்றும், இதை விவேகித்து அறிந்துகொள்ள முடியாமையாலே எல்லா ஜாதிகளிலும் எல்லாச் சொற்களையும் பர்யாயமாக ப்ரயோகித்து வருகிறோமென்றும் ஆழ்ந்த ஞானமுடையோர் சொல்லக் கேட்டிருக்கிறோம். இதை ப்ரக்ருத விஷயத்திலும் நினைப்பது.

இனி, காதல் அன்பு வேட்கை அவா என்கிற சொற்கள் எந்தெந்த அவஸ்தா பேதத்தையிட்டுத் தோன்றியவை என்பதை [மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியை யநுஸரித்து] விவரிக்கின்றோம். ஒரு விஷயத்தைக் கண்டபோதே முதற்காட்சியில் முன்னம் உண்டாகிற ஆசை காதலெனப்படும். இதுவே ஸம்ஸ்க்ருதத்தில் ஸங்கமெனப்படும்.

* ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: * என்கிறபடியே முன்சொன்ன ஆசைக்கு அடுத்தபடியாய் அவ்விஷயத்தை அநுபவித்தல்லது நிற்கவொண்ணாதபடியாய்த் தோன்றுகின்ற ஆசை அன்பு எனப்படும். இதுவே ஸம்ஸ்க்ருதத்தில் காமமெனப் படுவதாகக் கொள்க.

இவ்வாசைக்கு அடுத்தபடியுண்டாமதாய், அநுபவிக்கவேண்டிய விஷயத்தில் ஆசை இடையறாமல் தொடர்ந்து செல்லும்படியான அவஸ்தை ஒன்றுண்டே அது வேட்கையெனப்படும். இதுவே ஸம்ஸ்க்ருதத்தில் அநுராகமெனப்படும்.

அதன் பிறகு, அவ்விஷயத்தை மேன்மேலும் அநுபவித்துக்கொண்டேயிருக்குமதொழிய விட்டுப்பிடிக்க முடியாதபடியான ஓர் அவஸ்தை ஏற்படுவதுண்டே அதுதான் அவாவென்பது; இதுவே ஸம்ஸ்க்ருதத்தில் ஸ்நேஹமெனப் படுவதாகக் கொள்க.

இப்படிப்பட்ட ஆசையில் அவஸ்தா பேதங்கள் விஷயாந்தரங்களிலே யீடுபட்டவர்களுக்கு அநுபவவேத்யமாயிருக்கும் ஒரு கவி * **அதர்சநே தர்சந மாத்ரகாமா: த்ருஷ்ட்வா பரிஷ்வங்க ரஸைகலோலா:, ஆலிங்கிதாயாம் புநராயதாக்ஷ்யாம் ஆசாஸதே விக்ரஹயோரபேதம்.** * என்றான். இந்த ச்லோகத்தை நம் ஆசாரியர்கள் பகவத் விஷயத்திலே கொண்டு ரஸிப்பிக்கிறார்கள். திருநெடுந்தாண்டகத்திலே (21) * மைவண்ண நறுங்குஞ்சிப் பாசுரத்தின் பட்டர்படிவியாக்கியானம் ஸேவிக்க.

ப்ரஹ்லாதாழ்வான் அழகிய சிங்கப்பெருமானிடம் தான் ப்ரார்த்தனை செய்து கொள்ளும்போது ''யா ப்ரீதிரவிவேகாநாம் விஷயேஷ்வநபாயிநீ'' என்று அவிவேகிகளுக்கு விஷயாந்தரங்களிலுண்டாகும் ப்ரீதியை எடுத்துக்காட்டி அந்த ப்ரீதியெல்லாம் தனக்கு பகவான் திறத்திலேயே உண்டாகப் பெறவேணுமென்று வரம் கேட்கிறான்.

காதல் அன்பு வேட்கை அவா என்று உத்தரோத்தரம் விபாகதசையை யடைந்து வளரும் ப்ரீதிவிசேஷம் நமக்கு பகவத் விஷயத்திலே உண்டாகவேணு மானால் பகவானுடைய திருமேனியை ஸேவிக்கப்பெற்றாலல்லது உண்டாக வழி யில்லை. புஷ்பம் சந்தனம் மாதர் மற்றும் போக்ய பதார்த்தங்கள் இவற்றைக் கண்டா லொழிய நமக்கு அவற்றில் ப்ரீதியுண்டாவதில்லை. அதுபோல பகவானைக் கண்டா லொழிய நமக்குக் காதலோ அன்போ வேட்கையோ அவாவோ இவை யுண்டாக மாட்டா.

''குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழு வதோருரு என்னெஞ்சுள்ளெழும் ஆர்க்குமறிவரிதே'' என்று நம்மாழ்வாரருளிச் செய்கிறபடி எம்பெருமானை நெஞ்சுள்ளே கண்டு ப்ரீதியை வளர்க்கும்படியான பாக்கியம் அஸ்மதாதிகளுக்கு ஒருபோதும் எட்டாது. அஸ்மதாதிகளுக்கு ப்ரீதி யுண்டாகும் பொருட்டே எம்பெருமான் திவ்யமங்கள விக்ரஹ பரிக்ரஹம் பண்ணி அர்ச்சாரூபத்தை ஏற்றுக்கொண்டனன். ஸ்ரீவசந பூஷணத்தில் (40) ''இது தான் சாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணாதே விஷயாந்தரங்களிலே மண்டி விமுகராய்ப் போரும் சேதநர்க்கு வைமுக்யத்தை மாற்றி ருசியை விளைக்கக் கடவதாய் ருசி பிறந்தால் உபாயமாய் உபாயபரிக்ரஹம் பண்ணினால் போக்யமுமா யிருக்கும்'' என்ற சூர்ணையை இங்கே அநுஸந்திப்பது. இந்த சூர்ணையில் ''இதுதான்'' என்றது இவ்வர்ச்சாவதாரந்தானென்றபடி. ஆக, நமக்கு பகவத் விஷயத்தில் காதல் அன்பு வேட்கை அவா என்னுமிவை வளருவதற்கு அர்ச்சாவ தார ப்ராவண்யமல்லது வேறொரு தஞ்சமில்லை யென்றதாயிற்று. ... ... *

---

# 10. பகவத் விஷயாதிகாரிகள்

உலகில் எம்பெருமான் ஈந்தருளின கலைகளுக்குக் கங்குகரையில்லை. ''கலை களும் வேதமும் நீதிநூலும் கற்பமும் சொற்பொருள் தானும் மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள்செய்து'' என்ற திருமங்கை யாழ்வார் திருமொழியின்படி பேரருளாளனை பெருமான் பாருலகில் பரவவிட்ட சாஸ்த்ரங்கள் அளவுகடந்தவை. ஆசார்ய ஹ்ருதயத்தில் ''முனிவரையிடுக்கியும் முந்நீர் வண்ண னாயும் வெளியிட்ட சாஸ்த்ர தாத்பர்யங்களுக்கு'' என்றருளிச் செய்யப்படுகிறது. அதாவது வ்யாஸ பராசராதி மஹர்ஷிகளை ஆவேசித்து அவர்களது வாக்காக சாஸ்த் ரங்களை வெளியிட்டானென்றும், தானே நேராகத் தன் வாக்காகவே சாஸ்த்ரதாத்

பர்யத்தை வெளியிட்டானென்றும் சொன்னவாறு. இதில் சாஸ்த்ரமென்றும் சாஸ்த்ரதாத்பர்யமென்றும் இரண்டு விபாகம் காட்டப்பட்டுள்ளது. மஹர்ஷிகளாலே ப்ரவர்த்திப்பிக்கப் பட்டவைகளுக்கு சாஸ்த்ரமென்று பெயர்; தானே ப்ரவர்த்திப்பித்த திருமந்த்ரத்திற்கு சாஸ்த்ரதாத்பர்யமென்று பெயர் — என்பதாக ஆசார்ய ஹ்ருதயகாரருடைய திருவுள்ளம். ஸகல சாஸ்த்ர ஸாரமென்னும் பொருளிலே சாஸ்த்ரதாத்பர்யமென்கிற சொல் பிரயோகிக்கப்பட்டுள்ளது.

ஸகல சாஸ்த்ர தாத்பர்ய ஸாரமெனப்படுவது திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரமொன்று மாத்திரமேயன்று; திருமந்த்ரம் த்வயம் சரம ச்லோகம் எனப்படுகிற ரஹஸ்யத்ரயமுமாம். இதனைச் சுட்டியே ''முமுக்ஷுவுக்கறிய வேண்டும் ரஹஸ்யம் மூன்று'' என்று பிள்ளையுலகாசிரியர் அருளிச் செய்தார். இம்மூன்று ரஹஸ்யங்களுக்கும் மூலத்தின்மேல் வியாக்கியானமாக முமுக்ஷுப்படி முதலிய சில ரஹஸ்ய க்ரந்தங்கள் தோன்றியுள்ளன. விசதவாக்சிகாமணியான மணவாள மாமுனிகளின் அருமருந்தன்ன வியாக்கியானங்களும் அவதரித்துள்ளன. இவற்றைக்கொண்டு ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே ரஹஸ்யத்ரயத்தின் அரிய பெரிய பொருள்களை — அகாரார்த்த மின்னது, உகாரார்த்த மின்னது, மகாரார்த்த மின்னது, நம: பதார்த்த மின்னது .......என்கிற முறையில் அறிந்துகொள்ள முடிகிறது.

இந்த ரஹஸ்யத்ரயத்தின் பொருள்களை வெகு விசதமாக விளக்குவதற்கென்றே ஆழ்வார்களின் ஈரச்சொற்களான திவ்ய ப்ரபந்தங்கள் அவதரித்தன. இவற்றுள் நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழிக்கு ஒப்புயர்வற்ற பெருமை அமைந்துள்ளது. ஆங்காங்கு திவ்யதேசங்களில் எம்பெருமான்களுக்குப் புறப்பாடுகள் நடைபெறும்போது திருவீதிகளில் திருவாய்மொழியை ஸேவிக்கக்கூடாதென்று ஸ்ரீமந்நாதமுனிகளோ ஆளவந்தாரோ எம்பெருமானாரோ இட்டருளின கட்டளையானது அன்று முதலின்றறுதியாக எங்கும் பரிபாலிக்கப்பட்டு வருகிறது. எம்பெருமான் தனது திவ்யாஸ்தானத்தில் எழுந்தருளியிருந்தே பராக்கின்றிக்கே திருச்செவிசாத்தியருள வேண்டிய திவ்ய ப்ரபந்தம் திருவாய்மொழி—என்று நம்பூர்வாசாரியர்கள் திருவுள்ளம் பற்றினது மிகவும் உசிதமானது. இஃதொன்று கொண்டே திருவாய்மொழியின் பெருமையை நாம் நன்கு உணரலாம், அரிய பெரிய பல வியாக்கியானங்கள் திருவவதரித்ததும் திருவாய்மொழிக்கே யன்றோ.

அந்த வியாக்கியானங்களுள் ஈடுமுப்பத்தாறுயிரப்படி யென்னும் வியாக்யானம் மிகச் சிறந்ததாகக் குலாவப்பட்டு வருகின்றது. இதற்கே பகவத் விஷய மென்று வ்யபதேசம். திருவாய்மொழி மூலத்திற்கே பகவத் விஷயமென்னும் பெயருண்டு என்றும், அதன் வியாக்கியானங்க ளெல்லாவற்றுக்குமே பகவத் விஷயமென்னும் பெயருண்டு என்றும் சிலர் சொல்லவந்தாலும் அதனை நாம் மறுப்போமல்லோம். இதிலென்ன விவாதம். திருவாய்மொழியைக் கொண்டு போது போக்குவதுதான் பகவத் விஷய காலக்ஷேப மெனப்படுகிறதென்பதில் யாருக்கும் விவாத மில்லையன்றோ. ஸ்ரீராமாயணம் ஸ்ரீபாகவதம் ஸ்ரீவிஷ்ணு புராணம் முதலான இதிஹாஸ புராணங்களும் பகவானை விஷயீகரித்தே அவதரித்திருந்தாலும் அவற்றில் ஒன்றையும் பகவத் விஷயமென்பாரில்லையே.

இக்காலத்தில் நம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்த க்ரந்தங்களைத் தூஷிப்பதையே விரதமாகக் கொண்டிருக்கின்ற அத்வைதி வித்வானொருவர் தமது நூலொன்றில் ஓர் அதிசயம் கண்டுபிடித்து எழுதியிருக்கின்றார்; அஃது உண்மை பொருந்தியதும் ரஸிக்கத் தக்கதுமாயிருப்பதால் ஸம்ஸ்க்ருதத்திலுள்ள வதனை மொழிபெயர்த்து இங்கெழுதுகின்றோம்; அதாவது, ''ப்ரஹ்ம ஸூத்ரத்திற்குப் பல பாஷ்யங்கள் தோன்றியுள்ளன; அவற்றை வ்யவஹரிக்கும்போது சங்கர பாஷ்ய

மென்றும் நீலகண்ட பாஷ்யமென்றும் மத்வபாஷ்யமென்றும் அந்தந்த பாஷ்யகர்த்தாக்களின் பெயர்களையிட்டு வ்யவஹரிக்கின்றதுலகம்; ஸ்ரீ ராமாநுஜர் செய்த பாஷ்யத்தைமாத்திரம் ராமாநுஜபாஷ்ய மென்னுமல் ஸ்ரீபாஷ்யமென்றே உலகமெல்லாம் வழங்கிவருகின்றது. இது அந்த பாஷ்யத்திற்கு ஓர் அதிசயமே, பாக்யமே. இதற்காகப் பிறர் அஸூயைப் படலாமேயொழிய வேறொன்றும் செய்ய முடியாது'' என்று. இதுபோல் பகவத்விஷயமென்ற வ்யவஹாரம் கடல் சூழ்ந்த மண்ணுலகில் ஒரே ஒரு க்ரந்தரத்னத்திற்குத் தான் நிகழ்ந்து வருகின்றதென்றால் இதிலும் பிறர்பொறுமைப்படவேண்டுமத்தனையே.

திருவாய்மொழியின் பெருமையை நம்மவர்கள் அறிந்திருப்பதும் பேசுவதும் எழுதுவதும் இருக்கட்டும். இதைக் கம்பர் அறிந்திருப்பதுபோலவும் பேசியிருப்பது போலவும் வேறு யாரும் அறிந்திலர், பேசிற்றிலர் என்னலாம். கம்பர் ஸ்ரீமந்நாதமுனிகளின் காலத்திலிருந்தவரென்று சில பெரியார் எழுதியிருந்தாலும், இவர் பட்டர் காலத்திலிருந்தவரென்றும் பட்டருடைய காலக்ஷேப கோஷ்டிகளில் அந்வயிக்கும் பாக்கியமும் பெற்றிருந்தவரென்றும் பொருத்தமான சான்றுகளுடன் பல பெரியார்கள் நிரூபிக்கிறார்கள். அவர் இயற்றிய சடகோபரந்தாதியில் ''கூட்டங்கள் தோறும் குருகைப்பிரான் குணங்கூறு மன்பரீட்டங்கள் தோறுமிருக்கப் பெற்றேம், இருந்தெம்முடைய நாட்டங்கள்தோறும் புனல்வந்து நாலப் பெற்றேம்'' என்றொரு செய்யுள் இன்சுவையே வடிவெடுத்தது. நம்மாழ்வாருடைய திருக்குணங்களைக் கூட்டங் கூட்டமாகக் கூடிக் குலாவிப் பேசுமவர்களின் கோஷ்டிகளிலெல்லாம் தாம் இருக்கப்பெற்றதாகவும், அப்படியிருக்கும்போது கண்களில் தாரை தாரையாக ஆனந்த பாஷ்பம் பெருகப்பெற்றதாகவும் கூறியுள்ளார். இத்தகைய ஓர் அதிசயம் திருவாய்மொழிக்குத் தவிர மற்றொன்றுக்கும் ஸம்பாவிதமன்று வெறும் மூலத்தைக் கேட்டாலும் கல்லும் கரையும். அது சொல்லின்பத்தைப் பொறுத்தது. பொருட்சுவை கண்டு ரஸிக்கவேணுமானால் ஈடுமுப்பத்தாறுயிரப்படி தவிர வேறு புகலில்லை. இதையருளிச் செய்தவர் நம்பிள்ளை; பட்டோலை கொண்டவர் வடக்குத் திருவீதிப்பிள்ளை. அஜ்ஞர், அல்பஜ்ஞர், மிதஜ்ஞர் என்று வழங்கப்படுகின்ற நம்போல்வாரை விட்டு மிகச் சிறந்த ஞானிகளைக் கூறவேணுமானால் பஹுஜ்ஞர் என்கிற சொல்தானுள்ளது ஸர்வஜ்ஞனென்னும் பெயர் ஸர்வேச்வரனுக்குத் தவிர மற்று எவர்க்கும் ஏலாதென்கிறார்கள்; உண்மையில் அகண்ட பூமண்டலத்திற்குள் ஸர்வஜ்ஞரென்னந் தகுதியுடையார் நம்பிள்ளை யொருவரேயென்று சபதம் செய்யலாம்.

இக்காலத்தில் அச்சுக்கூடங்கள் தலையெடுத்து எந்தப் புத்தகமும் வெகு ஸுந்தரமாக அச்சிடப்பட்டு மலிந்து கிடக்கின்றன. ச்லோகாநுக்ரமணிகை, பாதாநுக்ரமணிகை, பதாநுக்ரமணிகை, விஷயஸூசிகை முதலானவற்றோடுங் கூடி ஒவ்வொரு ஸ்ரீகோசமும் பலவித லிபிகளில் பல வியாக்கியானங்களோடும் பல பதிப்புகளேறி மனைதோறும் அடுக்கப்பட்டிருக்கின்றது. அக்காலத்தில் ஊருக்கு ஒரு ஸ்ரீகோசம் கிடைப்பதே அரிதாயிருக்கும். அதுதானும் ஓலைச்சுவடி. அதில் அநுக்ரமணிகையோ விஷய ஸூசிகையோ எதற்கும் ப்ரஸக்தியேயிராது. மற்றும் பல வகையான அஸௌகரியங்கள் மலிந்த ஸமயம் அது. அஸ்தமித்த பிறகு புஸ்தகம் பார்க்க ஸௌகரியமேயிராது. பெரும்பாலும் அப்படிப்பட்ட காலத்தில் பல்லாயிரக்கணக்கான ப்ரமாண வசனங்களை அந்தந்த ஸந்தர்ப்பங்களுக்கு வெகு பொருத்தமாக எடுத்துக் காட்டும் மஹாக்ரந்தம் ஈடுதவிர வேறொன்றும் விரலிட்டு எண்ணத்தகுந்ததாக இல்லையே.

இப்போதும் நர்போல்வார் ஒரு சிறு நூல் எழுதவேண்டுமானாலும் பல க்ரந்தங்களை எதிரே பரப்பி வைத்துக்கொண்டு வெகு ச்ரமப்பட்டு ப்ரமாணங்களைத் தேடி யெடுத்தெழுதுவதும், அநுக்ரமணிகாதிகளில்லாத புத்தகங்களைக் கண்டு சீறி விழுவதும், பெரும்பாலும் முன்னோர்கள் உதாஹரித்த வசனங்களையே கொண்டு நிரப்புவதும், ஒரு ப்ரமாணங்கூட கண்டஸ்தமாக இல்லாமலிருப்பதுமே பெரும் பான்மையாகக் காண்பது. ஈடு அவதரித்திருப்பது இப்படியன்றே. அதற்குமுன் ஒரு க்ரந்தமும் இப்படி ப்ரமாண புஞ்ஜ பூயிஷ்டமாகக் கண்டதில்லை. ஆங்காங்கு எடுத்தாளுகிற ப்ரமாணங்களைப் பார்த்தால் அவை அப்போதாகத் தேடிப்பிடித்து எழுதப்பட்டவையாக நினைக்க ப்ரஸக்தியேயில்லை. ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகளெல்லாம் கண்டஸ்தமாயிருந்தாலொழிய அந்த வியாக்கியானம் அவ்விதமாக அமைந்திராதென்று சொல்லுவதற்கோ எழுதுவதற்கோ நாமா அதிகாரி?

இப்படிப்பட்ட அபரிமித வைபவம் பொருந்திய மஹாக்ரந்தத்தில் அதிகாரிகளாவதற்கு எவ்வளவு யோக்யதை வேணுமென்பதைப் பற்றிச் சொல்லுவதற்கும் நாம் அநதிகாரிகளே. ஆனால் உலகரீதி எவ்வாறிருக்கிறதென்னில், ஸம்ஸ்க்ருதம் வாசித்தவர்கள் ஸ்ரீபாஷ்யம் ஸேவித்து ஸ்ரீபாஷ்யாதிகாரிகளென்று பட்டம் பெறுவதென்றும், ஸம்ஸ்க்ருதத்தில் அதிக ப்ரவேசமில்லாதவர்கள் பகவத்விஷய ப்ரவசந கோஷ்டிகளில் அந்வயித்து பகவத் விஷயாதிகாரிகளென்று பட்டம் பெறுவதென்றும் காண்கிறது. இதையொரு இகழ்ச்சியாக நாம் எடுத்துக்காட்டுவதாய் யாரும் கொள்ளலாகாது. இதர பாஷைகளின் மேன்மையும் பிரசாரமுமே அதிகரித்து, ஜீவநோபயோகியான கல்விக்கே ஆதிக்யமும் ஏற்பட்டிருக்கு மிக்காலத்தில் ஸ்ரீபாஷ்யத்தையோ பகவத் விஷயத்தையோ ஸ்மரிப்பாருமில்லை. பெரும்பாலும் திவ்ய தேசங்கள் தோறும் பலவிடங்களிலும் ஸ்ரீபாஷ்ய பகவத் விஷய ப்ரவசனம் அவிச்சிந்நமாக நடந்து கொண்டிருந்த காலத்தையும் நாமறிவோம். அடுத்த நூற்றாண்டில் இந்த திவ்ய க்ரந்தங்களின் பெயரைக் காதால் கேட்பதும் அரிதாகுமோ! என்கிற சங்கை பல பெரியோர்களின் நெஞ்சிற் குடிகொண்டிருக்கிறது.

"நாவினுள் நின்று மலரும் ஞானக் கலைகளுக்கெல்லாம் ஆவியு மாக்கையுந்தானே அழிப்போடளிப்பவன் தானே" என்பது திருவாய்மொழியில் ஒரு பாசுரம். ஞானக்கலைகளை யுண்டாக்குபவனும் எம்பெருமானே, அவற்றை அபிவிருத்தி செய்பவனும் அவனே; ஒரு காலவிசேஷத்தில் அவற்றை அழிப்பவனும் அவனே என்று இப்பாசுரத்தில் சொல்லப்படுகிறது. உலகங்கள் அழியும்போது ஞானக் கலைகளும் அழிந்தால் அழியட்டும். உலகமுள்ளவரையில் ஞானக் கலைகள் இல்லையானால் குருடர்கள் தவிப்பதுபோல் தவிக்கவேண்டியே வரும் என்பதில் ஐயமில்லை. ஞானக்கலைகளுள் மிகச் சிறந்தது உபயவேதாந்த சாஸ்த்ரமே.

தர்க்கம் வியாகரணம் முதலிய ஸாமாந்ய சாஸ்த்ரங்களை வாசிப்பது வேதாந்தசாஸ்த்ரத்தில் அவகாஹிப்பதற்காகவே யென்பது யாவருமிசைந்த வஸ்துஸ்திதி. ஆனால் அந்த ஸாமாந்ய சாஸ்த்ரங்களை வாசிப்பவர்கள் பெரும்பாலும் அந்தந்த சாஸ்த்ரங்களோடு நின்றுவிடுகிறார்களே தவிர அவற்றை வேதாந்த சாஸ்த்ரத்திற்கு சேஷ பூதமாக்குகிறவர்கள் மிகச் சிலரே. ஸம்ஸ்க்ருத வித்வான்கள் பல பலவிடங்களிலிருந்தாலும் காசியில் இருப்பதுபோல் பூமண்டலத்தில் வேறு எவ்வூரிலும் இருக்கமாட்டார்களென்பது பலருமறிந்ததே. அங்கு வியாகரண சாஸ்த்ரமொன்றுக்குத்தான் பிராபல்யம். அதில் ஆழ்ந்த ஞானமுடையவர்கள் ஐந்நூறு பேர்களுக்குமேல் இருப்பார்கள். தர்க்கசாஸ்த்ர பண்டிதர்கள் இருபது பேர்களிருக்கலாம். பொதுவாகப் பண்டிதர்கள் - ஸம்ஸ்க்ருதஜ்ஞர்கள் என்னத் தகுந்தவர்கள் ஆயிரவருளர். அங்குள்ள பாடசாலைகளை எண்ணி முடியாது. பண்டி

தர்களின் க்ருஹந்தோறும் ஒவ்வொரு பாடசாலையாம், இதைக் காணும்போதும் கேட்கும்போதும் நமக்கு மிகுத்த அஸூயையே யுண்டாகிறது. மந்த்ரதந்த்ர வைத்ய ஜ்யோதிஷாதிகளில் வல்லவர்களும் நிரம்பியிருக்கிறார்கள். இவ்வளவு அதிசயம் பெற்ற அவ்வூரில் வேதாந்த சாஸ்த்ர பரிசயம் பெற்றவர்கள் மிகச்சிலரே யுள்ளார்கள். அந்த வேதாந்திகளும் அத்வைத வேதாந்தத்திற்கு மேல் வேறொரு வேதாந்தமிருப்பதாக நினைப்பவர்களேயல்லர். த்ராவிட வேதாந்தத்திற்கு இங்கு ப்ரஸக்தியே கிடையாது. இவ்விடத்தில் சில வருஷங்களாக **ஸ்ரீராமாநுஜ ஸம்ஸ்க்ருத வித்யாலயம்** என்ற பெயரால் ஒரு ஸ்ரீவைஷ்ணவ பாடசாலை ஸ்தாபிக்கப்பட்டு ஸ்ரீவைஷ்ணவ தனிகர்களான பலஸேட்டுக்களின் விசேஷமான ஆதரவின் கீழ் வெகு சிறப்பாக நடந்து வருகிறது. இதிலும் வியாகரண வித்யார்த்திகள் அதிகமே யொழிய வேதாந்த வித்யார்த்திகள் குறைவுதான். இம்மஹா க்ஷேத்ரத்தில் இவ்வோரிடத்தில் தான் விசிஷ்டாத்வைத வேதாந்தமென்பது சிறிது தலைகாட்டி வருகிறது. இந்த வித்யாலயத்தில் ஒருஸமயம் அடியேனுடைய சில உபந்யாஸங்கள் ஸம்ஸ்க்ருத பாஷையில் நடைபெற வேணுமென்று ஆப்தர்களான சில வித்வான்கள் ஆவலோடு கோரினார்கள். திவ்யப்ரபந்த திவ்யார்த்தங்களின் ரஸங்களைக் காசீ வித்வான்களுக்கு யதாசக்தி ஊட்டவேணுமென்கிற ஆசை அடியேனுக்கு மிகவுமிருந்தது

சில வருஷங்களுக்கு முன்பு அடியேன் திவ்ய ப்ரபந்தங்களை ஸம்ஸ்க்ருதப் படுத்துவதையும் அவற்றை க்ரமேண அச்சிட்டு வெளியிடுவதையுமே முக்கிய கைங்கரியமாகக் கொண்டிருந்தேனென்பது பலர்க்குத் தெரிந்திருக்கும். காசியிலும் இதுகண்ட வித்வான்கள் இவ்விஷயத்தைப் பற்றியே உபந்யாஸம் நடைபெற வேணுமென்று விரும்பினார்கள். அந்த விருப்பம் சர்க்கரைப் பந்தலில் தேன்மழை பொழிந்தது போலாயிற்று அடியேனுக்கு. அப்போது ஆண்டாளுடைய திருப்பாவைக்கு மிக விரிவான ஸம்ஸ்க்ருத வியாக்கியானம் அடியேனெழுதிக் கொண்டிருந்தபடியால் அவ்விடத்தில் அன்று எழுதிய "முப்பத்து மூவரமரர்க்கு" என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தை மூன்று மணிகாலம் உபந்யஸிக்க ப்ராப்தமாயிற்று. அந்தக் கோஷ்டியில் நம்முடைய தேசத்தவரான ஸ்ரீ உ. வே வியாகரண வேதாந்த வித்வான் (லேட்) நீலமேகாசார்ய ஸ்வாமி யொருவரே தமிழுணர்ந்தவரிருந்தனர். [இந்த ஸ்வாமி இந்த வித்யாலயத்தில் வேதாந்த ப்ரவசந கர்த்தாவாக ஏழெட்டு வருஷமிருந்தவர்.] மற்ற வித்வான்களெல்லாரும் த்ராவிட கரந்தமே யறியாதவர்கள். அப்படிப்பட்டவர்களும் இவ்வர்த்த விசேஷங்களைக் கேட்டு ஆனந்தஸாகரநிமக்நர்களாயினர் இவர்கள் பெரும்பாலும் த்ராவிட ப்ரபந்தங்களை இழிவாக நினைத்துமிருந்தவர்கள். பலாண்டு பலாண்டு வென்றுபரிஹஸிப்பதுமுண்டிவர்கள். அப்படிப்பட்டவர்களுடைய மனம் (19—7—53-ல்) நீராயுருகி நின்றது இதை இங்கு நாம் ஆத்ம ப்ரசம்ஸையாக எழுதிக்கொள்ளவில்லை. விலக்ஷணமான பேர் ஆனந்தம் மேலிட்டு இதை இங்கு எழுதநேர்ந்தது "பகவத் விஷயத்தின் பெருமையை இப்பிறவியில் இன்றுதான் நாங்கள் அறியப் பெற்றோம்" என்று அவர்களின் வாயில் வெளிவந்தது மன்றியில், தாங்கள் கற்ற கல்வியெல்லாம் காசுக்கமுதவாது என்கிற துணிபும் அவர்களுடைய உள்ளத்தில் ஊர்ஜிதமாயிற்று. இவ்வளவோடு இந்த ப்ராஸங்கிக ப்ரஸ்தாவத்தை முடித்துக் கொள்ளுகிறேன்.

இந்த வியாஸத்தில் முக்கியமாக அடியேன் விஜ்ஞாபிக்க நினைத்த விஷயங்களை இனிச் சுருக்கமாகவெழுதி முடிக்கிறேன்.

பகவத் விஷயம் ஸேவித்தவர்களெல்லாரும் பகவத் விஷயாதிகாரிகள் ஆக மாட்டார்களென்பது நீசனேனுடைய நினைவு. ஸ்ரீபாஷ்யம் ஸேவித்தவர்களெல்லா

ரும் ஸ்ரீபாஷ்யாதிகாரிகளென்னப் பெறலாம்; பகவத் விஷயாதிகாரிகளுக்கு மாத்திரம் தனிப்பட்டவொரு சிறப்புண்டு; அஃது எளிதில் கிடைக்கக்கூடியதன்று. எம்பெருமானுடைய திருக்குணங்களில் நீர்ப்பண்டமா யுருகிக் கிடப்பதுதான் அது. அது ஜந்மாந்தர ஸஹஸ்ரநற்றவங்களின் பயனாகவே விளையக்கூடியது *கங்குலும் பகலும்* என்கிற திருவாய்மொழியின் ஈட்டு ப்ரவேசத்திலே பட்டரைப்பற்றி ஒரு வாக்யமுள்ளது; அதாவது, ''பட்டர் இத்திருவாய்மொழி அருளிச் செய்யும் போதெல்லாம் 'ஆழ்வார்க்கு ஓடுகிற தசையறியாதே அவருடைய பாவ வ்ருத்தியு மின்றிக்கே யிருக்கிற நாம் என் சொல்லுகிறோம்!' என்று திருமுடியிலே கையை வைத்துக் கொண்டிருப்பர்'' என்பதாம். இதனால் பட்டர் தம்மை பகவத் விஷயத்திற்கு அநதிகாரியென்று திருவுள்ளம் பற்றியிருந்ததாகப் புலப்படுகிறது. அது அவருடைய இயற்கையான நைச்யாநுஸந்தானத்தில் சேர்ந்ததாகட்டும். பொதுவாக பகவத் விஷயாதிகாரிகள் துர்லபர் என்பது அந்த ஸ்ரீஸூக்திகளினால் நன்கு விளங்கும். நாலுவார்த்தைகள் பேசின போதே (அல்லது) எழுதினபோதே இந்த அதிகார அநதிகாரங்களை எளிதாகக் கண்டுணரலாம். பாசுரங்களுக்குப் பொருள் சொல்லிவிடுவதும் ஈட்டுப் பங்க்திகளுக்கு அர்த்தமுரைப்பதும் ச்ரமப்பட்டு ஸம்பாதிக்கக் கூடிய யோக்யதையே. ஆனால் *நின்று நின்று நையும் நெடுங்கண்கள் பனிமல்கவே *என்னெஞ்சர் நின்று நெக்கு அருவிசோரும் கண்ணீர் என்செய்கேனடியேனே* என்னும்படியான நிலைமை வாசிப்பினாலாவது, பங்க்திகளை உருப்போடுவதனாலாவது விளையக்கூடியதன்று. சில வ்யக்தி விசேஷங்களை அடியேன் ஸேவித்திருக்கிறேன்; அவர்களுக்கு சப்தார்த்த ஜ்ஞாந யோக்யதையில் சிறிது குறையிருந்தாலும் நெஞ்சில் கனிவு நன்றாக உண்டு. அன்னவர்களின் திருவாக்கிலிருந்து அருளிச் செயல் புறப்பட்டால் 'அமுதமொழுகுகின்றது' என்று நினைக்கும் படியாயிருக்குமேயல்லது சொற்கள் வெளிவருகின்றன வென்று நினைக்கும்படியிருக்கவே யிராது. எம்பெருமானாரும் கூரத்தாழ்வான் பக்கலிலே பகவத் விஷயம் கேட்க ஆசைப்பட்டாரென்று கேள்விப்படுகிறோம். அப்படிப்பட்ட அதிகாரிகள் இக்காலத்தில் எங்ஙனம் கிடைக்கப்போகிறார்கள்? வ்யக்தி விசேஷங்கள் அடியோடு இல்லையென்று சொல்லப்போகாது. இக்காலத்திலும் ஆங்காங்கு விரளர்களாக வுள்ளார்கள். அதுநிற்க.

திருவாய்மொழி மூலத்தின்மேல் நன்றாகப் பொருள் சொல்லவும், ஈடுமுப்பத்தாறாயிரப்படியை அக்லிஷ்டமாக அந்வயிக்கவும் ஸாமர்த்தியம் பெற்றவர்களையும் பகவத்விஷயாதிகாரிகளென்று ஒருவாறு இசையத்தட்டில்லை. இவ்வகையதிகாரிகள் நாளடைவில் லோபிக்கக் காண்கிறோம். இது மிகவும் சோசநீயமான விஷயம். ஸ்ரீபாஷ்யத்தை ச்ருதப்ரகாசிகை யோடுங்கூடப் பரீக்ஷை கொடுக்க முன்வரக்கூடியவர்கள் பலர் தேறுவர்கள். பகவத் விஷயத்தில் அப்படி பரீக்ஷை கொடுக்கக்கூடியவர்கள் தேறுவது அரிதாயிருக்கின்றது. இது அகாதமான ஸமுத்ரம். இதில் நீஞ்சிக் கரைகாண்பது கஷ்டமே. இதில் உதாஹரிக்கப்பட்டுள்ள ஆயிரக்கணக்கான ப்ரமாணவசனங்களில் உபஸ்திதியிருக்க வேண்டியது முதற்காரியம். ஈட்டின் பாஷையே விலக்ஷணமாதலால் அதில் வ்யுத்பத்தி யுண்டாகவேண்டியது மிக முக்கியம். இதை ஸாதிப்பதற்கு ஆஸ்தையும் ஸ்வாஸ்த்யமும் ஆவச்யகமாகும். மிவகு ச்ரமப்பட்டு இவ்வரிய பெரிய யோக்யதையை ஸம்பாதித்தால் இஹலோக ப்ரயோஜனம் என்னவுண்டு? என்று கேட்பவர்களே அதிகம். அவர்களது கேள்விக்கு நாம் என்ன விடைகூற முடியும். ஆத்யானந்தம் அபரிமிதம் என்பதொன்றையே நோக்கவேணும். ... ... ... ... ... *

# 11. சமத்காரமான வொரு ஸ்ரீஸூக்தி

இராவணனாலே திரஸ்கரிக்கப்பட்ட ஸ்ரீவிபீஷணாழ்வான் இராமபிரானிருக்கு மிடத்தேற வந்து ஆகாயத்திலிருந்து கொண்டே "**ராகவம் சரணம் கத:**" என்று சொல்லிப் பெருமாளைச் சரணமடைந்து இச் செய்தியைப் பெருமாள் திருவடிகளிலே விண்ணப்பம் செய்யுமாறு ஸுக்ரீவ மஹாராஜர் முதலானோரை நோக்கி "ஸர்வ லோக சரண்யாய ராகவாய மஹாத்மநே, நிவேதயத மாம்க்ஷிப்ரம் விபீஷண முபஸ்திதம்" என்றான். இதுகேட்ட ஸுக்ரீவன் பெருமாளிடம் வந்து அதை அப்படியே விண்ணப்பம் செய்யவேணுமே யொழிய வேறொன்றும் சொல்லத்தகாது. ஆனால் அவன் தான் விபரீதமான அபிப்ராயங்கொண்டு அவ்விபீஷணாழ்வான் மீது அவத்யங்களை யேறிட்டு அவனை இந்த கோஷ்டியில் சேர்த்துக்கொள்ளவே கூடாதென்று வலிதாக ஆக்ஷேபங்கள் செய்தான். பெருமாள் "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந* என்று தம் திருவுள்ளத்தைத் திடமாக வெளியிட்ட பிறகுங்கூட ஸுக்ரீவன் தன் பிடிவாதத்தை விடாமல் ஆக்ஷேபத்தையே வலிதாகச் செய்து கொண்டிருந்ததாய்க் காண்கிறது. பெருமாளுடைய திருவுள்ளத்திற்கும் திருவடியின் அபிப்ராயத்திற்கும் பொருந்தாதபடி ஸுக்ரீவன் இப்படி ஆக்ஷேபஞ் செய்து கொண்டிருந்தது ஏன்? என்று பலரும் கேட்க நேர்கின்றது. இதற்கு நம் ஆசாரியர்கள் அருளிச் செய்வது பாரீர்;—

**"*ஸுக்ரீவம் சரணம் கத:* என்றத்தை நடத்தப் பார்த்தார் மஹாராஜர்;**
***ராகவம் சரணம் கத:* என்றத்தை நடத்தப் பார்த்தார் பெருமாள்."**

என்று பட்டர் அருளிச் செய்யும் வார்த்தையாம். இது திருவாய்மொழி (4-5-8) பாட்டின் ஈடு முப்பத்தாறுயிரத்திலே காணத் தகும். இந்த ஸ்ரீஸூக்தியின் கருத்தை விவரிப்போம். தன்னிடத்திலே சரணாகதி பண்ணினவன் திறத்தில் அன்பு கொள்வது உலகில் ஸஹஜமானது அந்த அன்பு ஸாமான்யமாக வல்லாமல் அளவு கடந்திருந்தால் 'இந்த வ்யக்திக்கு யாராலே என்ன அவத்யம் நேருமோ? என்று அஸ்தாநே பயசங்கையையும் விளைக்கும். ஸ்ரீராகவன் விபீஷணாழ்வானை *ந த்யஜேயம் கதஞ்சந* என்று சொல்லி இவனை ஸ்வீகரித்தே தீருவேன் என்று சொன்னதற்குக் காரணம் அவன் தன்னிடத்தில் சரணாகதன் என்பதுதானே. ஸுக்ரீவன் அவ்விபீஷணனைப் புகரவொட்டேனென்று தடுப்பதற்குக் காரணமும் இவ்விதமாகவே யுள்ளது. எங்ஙனே யென்னில்; விபீஷணாழ்வான் ஸ்ரீராகவனிடத்தில் சரணாகதனானது இன்று; இந்த ஸ்ரீராகவன் ஸுக்ரீவனிடத்தில் சரணாகதனானது பண்டே. இராமன் ஸுக்ரீவனை சரணாகதி செய்வதற்கு நியாயமில்லையானாலும் *லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி* என்றும், *ஸுக்ரீவம் சரணம் கத:* என்றுமுள்ள ப்ரமாணங்கள் (கிஷ்கிந்தாகாண்டத்தில்) மலிந்து கிடக்கையாலே அது செய்தது அபலபிக்க முடியாத விஷயம். ஆக சுக்ரீவன், தன்னிடத்திலே சரணாகதனான ராகவனிடத்திலே பரிவுகொண்டு இவனுக்கு யாரால் என்ன அவத்யம் விளைந்திடுமோவென்று அஸ்தாநே பயசங்கைபண்ண ஔசித்யமிருக்கையாலே விபீஷணனைத் தடுத்தது பொருந்தும் என்று பட்டர் திருவுள்ளம் பற்றினது மிக நன்று.

கம்பர் பட்டர் காலத்திலிருந்தவரென்றும், பட்டர் கோஷ்டியில் அந்வயித்துப் பல அர்த்த விசேஷங்கள் கேட்டவரென்றும் ஆராய்ச்சியில் வல்ல பெரியார்கள் திடமாகச் சொல்லுவதுண்டு. மேலே நிரூபித்த அர்த்த விசேஷத்தை பட்டர் கோஷ்டியிலே கம்பர் கேட்டு அதைத் தம்முடைய ராமாயணத்திலே ஒரு செய்யுளாக அமைத்து வைத்திருக்கின்றார், அச்செய்யுளாவது—

''ஆதலான் அபயமென்ற பொழுதத்தே அபயதானம்
ஈதலே கடப்பாடென்பது, இயம்பினீரென்பால் வைத்த
காதலான் இனிவேறெண்ணக் கடவதென்? கதிரோன் மைந்த!
கோதிலாதவனே நீயே என்வயிற் கொணர்தி யென்றான்''

என்பதாம். இச்செய்யுளில் ''என்பால் வைத்த காதலால்'' என்றது உயிரான வார்த்தை. இது பட்டரிடத்துக் கேட்ட அர்த்த விசேஷமே யென்றுணர்க. ... ... *

---

# 12. ஸர்வரக்ஷகரக்ஷணம்

ஸர்வரக்ஷகரக்ஷணமென்னுஞ் சொல்லானது ஒரே வ்யுத்பத்தியினால் இருவகையான பொருள்களைத் தரும். ''ஸர்வரக்ஷகஸ்ய ரக்ஷணம் -- ஸர்வரக்ஷகரக்ஷணம்'' என்று விக்ரஹிக்க வேணுமிச்சொல்லை. ஸர்வரக்ஷகனான பகவானால் செய்யப்படும் ரக்ஷணம் என்பது இதற்குப் பொருளாக யாவருமறிந்தது. இப்பொருளில் ரக்ஷணத்திற்குக் கர்த்தா பகவான் என்பது பெறப்படும். பகவானுக்கு பாகவதர்களால் செய்யப்படும் ரக்ஷணமும் இச்சொல்லுக்குப் பொருளாகத் தேறக்கூடியதே. இப்பொருளில் ரக்ஷணத்திற்கு பகவான் கர்மீபூதனென்பது பெறப்படும். வியாகரணத்தில் ''கர்த்ருகர்மணோ: க்ருதி'' என்பதொரு ஸூத்ரம். இந்த ஸூத்ரத்தினால்தான் இவ்விரு பொருள்களும் தேறுகின்றன. ரக்ஷணம் என்கிற சொல் [க்ருதந்த]மெனப்படும். இதற்கு முன்னேயுள்ள ஷஷ்டீவிபக்தியானது கர்த்தா என்கிற பொருளையும் கர்மம் என்கிற பொருளையும் கொடுக்கும். ஸர்வரக்ஷக கர்த்ருக ரக்ஷணம் என்று கொண்டால் எம்பெருமான் நமக்குச் செய்யும் ரக்ஷணம் பொருளாகத் தேறும் ஸர்வரக்ஷக கர்மகரக்ஷணம் என்று கொண்டால் எம்பெருமானை நோக்கி நம் போன்றவர்கள் செய்யும் ரக்ஷணம் பொருளாகத் தேறும்.

எம்பெருமான் நம்மை ரக்ஷிக்கிறானென்றால் பொருந்தும்; ஸர்வரக்ஷகனென்று அவன் பெற்றிருக்கும் திருநாமத்திற்கும் இது பொருந்தியிருக்கும். எம்பெருமானை நாம் ரக்ஷிக்கிறோமென்றால் இது பொருந்தாதே; எந்த நிலைமையிலும் நாம் அப்பெருமானுக்கு ரக்ஷ்யர்களேயொழிய ரக்ஷகர்களாயிருக்கத் தகுதியில்லையே!—என்று சங்கை பிறக்கும். அவன் நம்மை ரக்ஷிக்கும் விதம், நாம் அவனை ரக்ஷிக்கும் விதம் ஆகிய இரண்டு படிகளையும் இங்குத் தெளிவிப்போமாக. *ந ஹி பாலநஸாமர்த்த்யம்ருதே ஸர்வேச்வரம் ஹரிம்* என்பது முதலான பல ப்ரமாணங்களினால் ஸர்வேச்வரனொருவனே ஸர்வலோகரக்ஷணம் செய்யவல்லவன். ரக்ஷகர்களென்று ப்ராக்ருதர்களால் நம்பப்படுகிற மற்றையோர்கள் பக்ஷகர்களேயொழிய ரக்ஷகர்களல்லர்; பிள்ளை லோகாசார்யரருளிச் செய்த அஷ்டாதசரஹஸ்யங்களுள் ஒன்றான ப்ரபந்நபரித்ராணத்தில் இது அனேக த்ருஷ்டாந்தங்களைக் கொண்டு மூதலிக்கப்பட்டிருப்பது காணலாம். ''ஈச்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்'' என்ற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியையும் ஸ்மரிப்பது. பத்த ஸம்ஸாரிகள், முமுக்ஷுக்கள், முக்தர், நித்யர் ஆகிய ஸகல சேதநவர்க்கங்களுக்கும் ஸர்வேச்வரனொருவனே அநிஷ்டநிவாரணமும் இஷ்டப்ராபணமுமாகிற ரக்ஷணத்தைச் செய்து போருகிறான். இதுதான் ஸர்வரக்ஷகன் செய்யும் ரக்ஷணம்.

இனி, ஸர்வரக்ஷகனான அப்பெருமானுக்கு நாம் செய்யும் ரக்ஷணமாவது என்னென்னில்; இதுதான் மங்களாசாஸனமெனப்படுவது. எம்பெருமான் ஸர்வரக்ஷகனாயிருக்கும்படியை மறந்து அவனுடைய ஸௌகுமார்யாதிகளையநுஸந்தித்து அஸ்தாநே பயசங்கைபண்ணி அவனுக்குக் காப்பிடுவதுண்டே [அதாவது

பல்லாண்டு பாடுவது] இதுதான் ஸர்வரக்ஷகனுக்கு நாம் செய்யும் ரக்ஷணம். ஸ்ரீவசநபூஷணத்தில் ''மங்களாசாஸநம் ஸ்வரூபவிருத்தமன்றோ வென்னில்'' என்று தொடங்கிப் பதினைந்து சூர்ணைகளினால் இவ்விஷயம் பரக்கவருளிச்செய்யப் பட்டிருப்பது காண்க. மங்களாசாஸனத்தைப் பற்றிச் சிறிது விளக்கமாக எழுதுவோம் இங்கு.

மங்களாசாஸனமென்கிறசொல் ஸ்ரீவைஷ்ணவஸம்பிரதாயத்தில்தனிச்சிறப்பு வாய்ந்தது. ஸ்ரீராமாயணம் முழுவதும் மங்களாசாஸன மயமாயிருக்கச் செய்தேயும் ஸ்ரீராமாயணம் பிரவசனம் செய்யும் ஸ்ரீவைஷ்ணவேதரர்களின் வாக்கில் மங்களாசாஸன மென்கிற சொல்லை விசேஷமாகக் காண்பதரிது. மணவாள மாமுனிகள் உபதேசரத்தினமாலையில்—''மங்களாசாசனத்தில் மற்றுள்ளவாழ்வார்கள், தங்களார்வத்தளவுதானன்றிப்-பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான். பெரியாழ்வாரென்னும் பெயர்.'' என்றருளிச்செய்தபடி மங்களாசாஸனத்தில் முதல் ஸ்தானம் பெற்றிருப்பவர் பெரியாழ்வாராவர். மங்களாசாஸனத்தின் மாண்பையும், ஸ்ரீராமாயணத்தில் அது பொலிந்தோங்குமிடங்களையும் விளக்குவோம்.

மங்களாசாஸனமென்பது பர்யாயத: ஆசீர்வாதமென்றபடியாம். பெரியார் சிறியார்களுக்கு ஆசி கூறுவதுண்டேயல்லது. சிறியார் பெரியார்க்கு ஆசி கூறுவதென்பது அஸம்பாவிதம். பெரியார்களில் *வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்* என்று ஓதப்பட்ட பரமபுருஷனிற்காட்டில் வேறு பெரியார் இல்லை. *மனிசர்க்குத் தேவர் போலத் தேவர்க்குந் தேவா வோ!* என்று போற்றப்படும் அப்பரம புருஷனுக்கு நாம் மங்களாசாஸனம் செய்வதென்பது [ஆசி கூறுவதென்பது] ஸ்வரூபத்திற்குச் சேருமா? என்பதை முந்துறமுன்னம் ஆலோசிக்க வேண்டும் இன்று புதிதாக நாம் ஆலோசிக்க வேணுமோ? *ஸர்வஜ்ஞலோக குருநிர்மித மார்ய போக்யம் வந்தே ஸதா வசநபூஷண திவ்ய சாஸ்த்ரம்* என்று போற்றப்படும் ஸ்ரீவசநபூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் அருளியவற்றை. மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தைத் தழுவிச் சிறிது விவரித்து விஜ்ஞாபிப்பது கேளீர்.

மங்களாசாஸனமாவது—அமங்களமொன்றும் நேராதபடி மங்கலம் தழைத்தோங்கவேணுமென்று ஆசாஸிப்பதேயாம். அமங்கலங்கள் புகுவதற்கு ப்ரஸக்தியுள்ளது. நம்மைப்போன்ற அற்பர்களிடத்தேயல்லது, எல்லாருடைய அமங்கலங்களையும் போக்கியருள வல்லவனும். மங்கலமே வடிவெடுத்தவனுமான எம்பெருமான் பக்கலில் அமங்கலம் புகுவதற்கு அற்பமும் அவகாசமில்லையே. அவனே ஸர்வரக்ஷகனென்று புகழ் பெற்றவன்; அவனிடத்தில் நாம் ரக்ஷை பெறத் தகுந்தவர்களேயொழிய, அவனை ரக்ஷிக்க நாம் நெஞ்சாலும் நினைக்கத்தகாதே–என்று மீண்டும் மீண்டும் சங்கிக்க நேரும். கேண்மின்; எம்பெருமான் ஸர்வரக்ஷகனென்பதும் அவனுக்கு எவ்விதமான ஆபத்தும்அமங்கலமும் நேராதென்பதும் உண்மையே; ஒருவரிடத்தில் நமக்கு உள்ளத்துள் ஊறிய அன்பு இருக்குமானால் அவ்வன்பு என்னென்ன செய்விக்குமென்பதை நாமறியோம். ஸ்ரீபாஷ்யத்தில் ஓரிடத்தில் ஸ்நேஹ சப்தப்ரயோகம் பண்ணினார் ஸ்வாமி எம்பெருமானார். அவ்விடத்தில் ச்ருதப்ரகாசிகாபட்டர் வியாக்கியானம் செய்தருளினார்—

''ஸம்பந்தவிசேஷாந்நிதேஷு ப்ரீதி: ஸ்நேஹ;
பாஸ்ய விபாகா:-அஸ்தாநபயசங்கித்வம் தோஷாநவபாஸ:
தோஷேபி குணத்வபுத்தி: இத்யாதய:'' என்று

அன்பு முற்றமுற்ற, அஸ்தானத்தில் பயசங்கையும் குற்றம் கண்ணில் படாமையும், குற்றத்தையே நற்றமாகக்கொள்ளும் பான்மையுமுண்டாம் என்றபடி. இது உலகத்

தில் ஸாமான்யமாக உண்டாகக்கூடியது. ஆபாஸ விஷயங்களிலேயே அன்பு பூண்டிருக்கிற நம்போல்வாருடைய அற்ப மதியைக்கொண்டு இதன் தத்துவத்தை உணர முடியாது. யசோதைப் பிராட்டிக்கு, கண்ணன் ஆயர்புத்திரனல்லன் அருந்தெய்வம் என்னுமுணர்ச்சி யிருக்கச்செய்தேயும் ''காப்பாருமில்லை கடல் வண்ணா! உன்னைத் தனியேபோய் எங்குந் திரிதி'' என்று மரய்கிறுளவள். *க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வமான நம்மாழ்வாரும் கண்ணனை உள்ளபடி அறிந்திருக் கச்செய்தேயும், *அவத்தங்கள் விளையும் என்சொற்கொள் அந்தோ! ஆழுமென்னு ருயிர் ஆன்பின்போகேல்* என்று கோபீதாதாத்மியபாவனையில் பேசுகிருர். இந் நிலத்தில் கதை இருக்கட்டும்; திருநாட்டில் கதை கேளுங்கள். * ஆங்காரவாரமது கேட்டு, அழலுமிழும் பூங்காரரவு* என்கிருர் திருமழிசைப்பிரான். ''ஹாவு! ஹாவு! ஹாவு!'' என்று ஸாமகோஷம் நடைபெறுமிடத்தில் யாரால் என்ன அபாயம் நேரக்கூடும்? *ப்ரக்ருஷ்ட விஜ்ஞாநபலைகதாமநி* என்று புகழப்பட்ட ஞானநிதி யான திருவனந்தாழ்வானன்றே ஸாமகோஷத்தை அரக்கரசுரர்போல்வாருடைய ஆரவாரமாக மருண்டு அழலை உமிழ்கிருன்.

பட்டர் ஸ்ரீகுணரத்நகோசத்தில் ஸ்ரீவைகுண்டத்தை வருணிக்கும் சுலோகத் தில் திருநாட்டுக்கு [அபயம்] என்று ஒரு விசேஷணமிட்டார். அஞ்சவேண்டாத நிலம் என்று தாற்பரியம். எதனால் அஞ்சவேண்டாத இடம்என்று தாமேகேட்டுக்கொண்டு ''ஸ்நேஹாத் அஸ்தாநரக்ஷாவ்யஸநிபி: சார்ங்கசக்ராஸி முக்க்யை: அபயம்'' என்றருளிச்செய்துளர். இவ்விஷயத்தை இன்னமும் பண்ணியுரைக்க பகவத்விஷயக மான ஸ்நேஹத்தைக் கனவிலும் கண்டறியாத நாம் அதிகாரிகளல்லோம் என்று நிற்போம்.

**ஸ்ரீராமாயணத்தில் மங்களாசாஸனங்கள்காணுமிடங்கள் சில கேண்மின்.**

1. **விச்வாமித்ர முனிவன்:** தனது வேள்வியைக் காப்பாற்றிக் கொடுக்கும் பொருட்டுத் தயரதமன்னவனிடம்வந்து *அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்ய பராக்ரமம்* என்று உண்மையாகவே சொல்லி [ஸ்ரீராமலக்ஷ்மணர்களை] அழைத்துக்கொண்டு போகாநிற்கச்செய்தே தாடகை வந்து அட்டஹாஸம் செய்ய, தாசரதிகளின் ஸௌகுமார்யத்தைக் கண்டுகலங்கி என்னுருமோ! என்றஞ்சி*விச்வா மித்ரஸ் து ப்ரஹ்மர்ஷி: ஹுங்காரேண அபிபர்த்ஸ்ய தாம், ஸ்வஸ்தி ராகவயோ ரஸ்து ஜயஞ்சைவ அப்யபாஷத*என்கிறபடியே தான் முன்னே நின்று அவளை ஹுங்கரித்து தாசரதிகளுக்குஒருதீங்கும்வாராதபடி மங்களாசாஸனம்பண்ணினுன்.

2. **ஸ்ரீ ஜநகராஜன்:** பெருமாளுக்குப் பிராட்டியைக் கன்னிகாதானம் பண்ணிக்கொடுக்கிற வேந்தர் தலைவனை சனகராசன் *இயம் ஸீதா மம ஸுதா ஸஹ தர்மசரீ தவ, ப்ரதீச்சசைநாம்* என்று சொல்லாநின்று இவருடைய அழகை யும் ஸௌகுமார்யத்தையுங் கண்டு கலங்கி, இச்சேர்த்திக்கு ஒரு அவத்யம்வாரா தொழிய வேணுமென்று(*பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா*) என்பதற்கு முன்னே *பத்ரம்தே* என்று மங்களாசாஸனம் பண்ணினுன்.

3. **தசரதசக்ரவர்த்தி:** பெருமாள் பிராட்டியைத் திருமணம் புணர்ந்து திருவயோத்திக்கெழுந்தருளாநிற்க, பரசுராமன் 'என் வில்வலி கண்டுபோ'வென்று எதிர்வந்தவாறே பெருமாளுடைய சக்திவிசேஷத்தை நன்கறிந்திருக்கச் செய்தே யும் இவருடைய இளமையையும் ஸௌகுமார்யத்தையுமே கண்டஞ்சி, தான்முன்னே யோடிச்சென்று *பாலாநாம் மம புத்ராணாம் அபயம் தாதுமர்ஹஸி* என்று சொல்லி அவனை சரணமடைந்து, பின்னையும் அப்பரசுராமன் பெருமாள் மேலே அடர்ந்து

செல்லுகிறபடியைக்கண்டு உயிரிழந்திருந்து அவன் தோற்று மீண்டுபோனனென்று கேட்டபின்பு *புநர் ஜாதம் ததா மேநே ஸுதாந் ஆத்மாநமேவ ச* என்று தானும் பிள்ளைகளும் மறுபிறவி பிறந்தாராக நினைத்ததாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

4. **ஜனகராஜன் திருமகள்:** பெருமாள் யுவராஜ பட்டாபிஷேகங் கொண்டருள்வதற்காக திவ்யாலங்காரங்கள் கொண்டு சக்ரவர்த்தியின் மாளிகைக்கு எழுந்தருளுகிறபோது பிராட்டி இவரழகிலே தோற்று 'இதுக்கு என்வருகிறதோ' வென்று ப்ரேமத்தாலே கலங்கி *பதிஸம்மாநிதா ஸீதா பர்த்தாரம் அஸிதேக்ஷணா, ஆத்வாரம் அநுவவ்ராஜ மங்களாந்யபிதத்யுஷி* என்று திருவாசலளவும் மங்களா சாஸனம் பண்ணிக்கொண்டு பின் சென்று *பூர்வாம் திசம் வஜ்ரதரோ தக்ஷிணாம் பாதுதே யம:, வருண: பச்சிமாமாசாம் தநதஸ்து உத்தராம் திசம்* என்று திக் பாலகர்களை இவர்க்கு ரக்ஷகராக அபேக்ஷித்ததாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

5. **அயோத்யாவாஸி ஜனங்கள்:** அயோத்யாவாஸி ஜனங்களில் பெருமாள் பெருமையை உணராதாரொருவரில்லை; அப்படி யிருந்தும் *ஸ்த்ரியோ வ்ருத்தாஸ் தருண்யச் ச ஸாயம் ப்ராதஸ் ஸமாஹிதா:, ஸர்வாந்தேவாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யசஸ்விந:* என்னும்படி சிறுமிகள் யுவதிகள் கிழவிகள் உட்பட யாவரும் காலையும் மாலையும் ஸகலதேவதைகளையும் தொழுது 'எங்களிராமனுக்கு ஓர் அவத்யமும் விளையாதிருக்கவேணும்' என்று பிரார்த்தனை செய்துகொண்டு வந்தார்களென்றது. யசஸ்விந: என்றது — இராமபிரானுக்கு இட்ட விசேஷணம்.

6 **தண்டகாரண்யவாஸிகளான மஹர்ஷிகள்:** "நாம் படுகிற கிலேசங்களையெல்லாம் போக்கவல்லவர் இவரே" என்று நன்கறிந்துள்ள தண்டகாரண்ய வாஸிகளான முனிவர்கள் *தே தம் ஸோமமிவோத்யந்தம் த்ருஷ்ட்வாவை தர்ம சாரிண:, மங்களாநி ப்ரயுஞ்ஜாநா: ப்ரத்யக்ருஹ்ணந் த்ருடவ்ரதா:* என்னும் படி மங்களாசாஸனத்திலே ஊன்றினர்களாயிற்று. அதன் காரணத்தை வால்மீகி பகவான் *ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம், தத்ருசுர் விஸ்மிதாகாரா: ராமஸ்ய வநசாரிணா:* என்கிற சுலோகத்தினல் வெளியிட்டார்.

7. **பெரியவுடையார் (ஜடாயுமஹாராஜர்):** இவ்விஷயம் சிறிது விவரித்து உணர்த்தவேண்டியதாகிறது. திருவடி இலங்கையிற் புகுந்து பிராட்டியைக்கண்டவுடனே *துஷ்கரம் க்ருதவாந் ராமோ ஹீநோ யத் அநயா ப்ரபு:, தாரயத்யாத்மநோ தேஹம் ந சோகேநாவஸீததி [இராகவன் இப்படிப்பட்ட பிராட்டியைப்பிரிந்தும் சடக்கென கோதாவரியில் விழுந்து மடியாதே உயிர்தரித்திருப்பது எதனுலோ! தேஹம் தன்னடையே போகவேணுமே! அப்படி போகாமலிருப்பது ஏனோ'] என்று வியந்து பேசினர். நம் முதலிகள் இதைப்பற்றி ஆராய்ச்சி செய்கையில், ஆரண்ய காண்டத்திலுள்ள ஜடாயுமஹாராஜரின் ஒரு வார்த்தையைக்கொண்டு ஸமாதானம் பண்ணினர்கள். அதாவது, பஞ்சவடியிலே பெருமாள் பிராட்டியைப்பிரிந்து அங்குமிங்கும் தேடிக்கொண்டு வருகிறபடியைக் கண்ட ஜடாயுமஹாராஜர், *யாமோஷதிமிவ ஆயுஷ்மந்! அந்வேஷஸி மஹாவநே. ஸா தேவீ மம ச ப்ராணா: ராவணேந உபயம் ஹ்ருதம்* என்றார். இதில் ராம! என்று ஸம்போதியாதே **ஆயுஷ்மந்!** என்று ஸம்போதனமுள்ளது. பெருமாள் அப்போது படுகிற துயரத்தைக்கண்டு இதனல் இவர்க்கு தேஹவியோகம் நேர்ந்து விடுமோ! என்று ஜடாயுவுக்கு அதிசங்கை தோன்றினபடியால் அப்படி ஒன்றும் நேராதபடிக்கு **ஆயுஷ்மந்!** என்று மங்களாசாஸனம் பண்ணினபடி இதுபற்றியே அவர்க்குப் 'பெரியவுடையார்' என்று திருநாமமாயிற்று. [பெரியாழ்வாரென்றது போல.] பிராட்டியின் வியோகத்தில் பெருமாள் உயிர்தரித்திருந்ததற்குக் காரணம் ஜடாயுமஹாராஜரின் ஆசீர்வாதமே.

# ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம்

ஸ்ரீ. உ. வே. திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை (ஸம்பத் என்னும்) ஸ்ரீநிவாஸ வரதாசார்ய ஸ்வாமிக்கு நிகழும் பிங்களஹூ மார்கழிமீ 23உ (7-1-78) சனிக்கிழமை கேட்டை நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் ஸ்ரீ காஞ்சீபுரத்தில் நடைபெற்றது. அன்று காலை உபயவேத ஸேவை சாத்துமுறைகள் முடிந்தபிறகு ஔபாஸநமும், மாங்கல்யதாரணமும், ஆசீர்வாதங்களும் நிகழ்ந்தன. கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலிய பல திவ்யதேசங்களிலிருந்து விசேஷமாக புஷ்பமாலை ப்ரஸாதங்கள் ஷெ ஸ்வாமிக்கு அளிக்கப்பட்டன. இந்த ஸ்வாமி ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீ உ. வே காதி க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமிக்கு ஜ்யேஷ்ட ஜாமாதா ஆவர். இவர் திருமலை திருப்பதி தேவஸ்தான ஸந்நிதிகளில் தீர்த்த மிராசு பெற்றவர், பரமாஸ்திகர். ஆத்மகுண பரிபூர்ணர். ஸர்வபூத ஸுஹ்ருத் என்று இவரை வழங்குவர்.

இந்த விழாவை ஸ்ரீ காதி ஸ்வாமி தம் திருமாளிகையில் மிக்க குதூஹலத்துடன் நடத்திவைத்தனர். ஸ்ரீரங்கத்திலிருந்து எழுந்தருளின ஸ்ரீ உ. வே. கோயில் அண்ணன் ஸ்வாமியும், ஸ்ரீ உ. வே. வாதூல ரங்காசார்ய ஸ்வாமியும், ஸ்ரீ உ. வே. வித்வான் சோளஸிம்ஹபுரம் சண்டமாருதம் பெரியப்பங்கார் ஸ்வாமியும், ஸ்ரீ. உ. வே. சோளஸிம்ஹபுரம் சண்டமாருதம் வேதாந்தசார்ய ஸ்வாமியும் ஸ்ரீ உ. வே. வித்வான் தி.அ. அக்காரக்கனி ஸம்பத்குமாராசார்ய ஸ்வாமியும் ஷெகோஷ்டியை அலங்கரித்துச் சிறப்பித்தது குறிப்பிடத்தக்கது. இப்படியே இந்தஸ்வாமி பல்லாண்டு பல்லாண்டாக எழுந்தருளியிருந்து சதாபிஷேகமும் கண்டருளவேணுமென்று பெரியோர்கள் ஆசீர்வதித்தருளினர். மங்களம். **தி அ. கிருஷ்ணதாஸன்**, திருப்பதி.

# ஸ்ரீராமாயண வினு-விடை

கண்ணன்;— ரகு! நீ ஸ்ரீராமாயணத்தில் விசேஷமாகப் பரிச்ரமப்பட்டிருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன்; ஒரு ஸந்தேஹம் கேட்கிறேன்; சொல்ல வேணும். கேட்கட்டுமா? சொல்லுகிறாயா?

ரகு;— இந்த பூர்வபீடிகையெல்லாம் எதற்காக? எத்தனையோ விஷயங்கள் கேட்டுக்கொண்டேயிருக்கிறாய்; நானும் சொல்லிக்கொண்டேயிருக்கிறேன், இப்போது புதிதாக இக்கேள்வி ஏதுக்கு? தாராளமாகக் கேள்; தெரிந்தவ்ளவில் சொல்லுகிறேன்.

கண்ணன்:— சக்ரவர்த்தி திருமகன் ஏகதாரவ்ரதன் என்று ப்ரஸித்தி பெற்றவன்தானே; "ராஜானோ பஹுவல்லபா:" என்பது அவனிடத்தில் கிடையாதன்றோ? இதில் ஏதாவது மதபேதம் பக்ஷபேதம் உண்டா என்ன?

ரகு;— இதென்ன புதுக்கேள்வியாயிருக்கிறதே. இந்தக் கேள்வியை இதுகாறும் யாரும் கேட்டதில்லையே. பவபூதி மஹாகவி இயற்றிய உத்தரராமசரிதநாடகம் வாசித்திருப்பாயே நீ; அதில் ஒரு சுலோகம் கேள். கர்ப்பிணியான ஸீதாபிராட்டி தலையணை யில்லாமல் தரையிலே ஶயனித்திருக்க, அப்

போது ஸ்ரீராமபிரான் சொல்லுவது—*ஆவிவாஹஸமயாத் க்ருஹே வநே ஶைஶவே ததது யௌவநே புந:, ஸ்வாபஹேது: அநுபாச்ரிதோந்யயா ராம பாஹுருபதாநமேஷ தே* என்பது. ஸீதே! உன்னை மணந்துகொண்டது முத லாக, ஏன்? இளமையிலோ யௌவனத்திலோ க்ருஹத்திலோ வனத்திலோ நீயொருத்தி தவிர வேறெருத்தியால் தொடப்படாததான இந்த ராமபாஹுவைத் தலையணையாகக் கொள்வாயாக—என்பது இதன் பொருள். இது தவிர, பிராட்டி யின் திருவாக்கினாலும் இராமபிரானுடைய ஏகதார வ்ரதத்வம் ஊர்ஜிதமாகியுள் ளது. எங்கேயென்னில், ஸ்ரீராமாயணம் ஆரண்யகாண்டத்தில் இராமபிரான் மஹர்ஷிகளுக்கு ராக்ஷஸவதம் பண்ணித்தருவதாக அபயமளித்தபோது, பிராட்டி அதை வலிதாக வெறுப்பதும், அப்போது பெருமாள் *அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே! ஸலக்ஷ்மணாம், ந ஹி ப்ரதிஜ்ஞாம் ஸம்ஶ்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விஶேஷத:* என்று தம்முடைய திடமான விரதத்தை வற்புறுத்திச் சொல்லுவதுமான ஸந்தர்ப்பத்திலே பிராட்டியினுடைய பேச்சுக் களில் அஃதிருப்பது காண்பாயாக.

கண்ணன்;— இப்படியிருக்க, ஸமுத்ரஶரணாகதி ப்ரகரணத்தில் 'புஜை பரமநாரீணாம் அபிம்ருஷ்டமநேகதா, பாஹும் புஜகபோகாபமுபதாயாரி ஸூதந:—என்று வான்மீகி முனிவர் சொல்லியிருக்கிறாரே, யாரோ சில உத்தம ஸ்த்ரீகள் பெருமாளுடைய திருக்கையைப் பலபடியாகத் தடவிக்கொடுத்திருந்த தாகச் சொல்லியிருக்கிறதே, இது என்ன? அவருடைய ஏகதார வ்ரதத்வத் திற்கு இது இணங்குமா? சொல்லவேணும்.

ரகு;— அங்கு நீ வியாக்கியானம் ஸேவிக்கவில்லை போலும். அங்கு 'பரமநாரீணா மென்றது ஸ்ரீபூநீளாதேவிகளை என்று வியாக்கியானம். ச்ரிய:பதி யானவன் இப்படி உவர்குழியை ஶரணம் புகுவதே! என்கிற பரிதாபம் மஹர் ஷிக்கு உண்டாகி அது இத்தகைய சொல்லாலே வழிந்து புறப்பட்டது.

(தொடரும்)

# திருமங்கையாழ்வாரும் திவ்யதேசாநுபவமும்

ஆழ்வார்களெல்லார்க்குமே திவ்யதேசாநுபவத்தில் ப்ராவண்யம் மிக்கிருந் தாலும் அது திருமங்கையாழ்வார்க்கு ஈடு மெடுப்புமில்லாததென்பதை ஸ்ரீவைஷ்ண வர்களனைவருமறிவர். 'பதியே பரவித் தொழுந் தொண்டர் தமக்குக்கதியே!* என்றும் *உலகமேத்துங் கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று மண்டினாருய் யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே* என்றும், *தானுகந்தவூரெல்லாம் தன் தாள் பாடி* என்றும் அருளிச்செய்தவர் திருமங்கையாழ்வாரேயன்றோ. இவ்வாழ்வார் பெரிய திருமொழியில் தொள்ளாயிரம் பாசுரங்களினால் (அதாவது-முதற்பத்தில் இரண்டாவது பதிகம் தொடங்கி ஒன்பதாம்பத்து முடிய) திவ்யதேசாநுபவமே செய்து போந்திருக் கிறார். அவ்வநுபவப்ரகாரத்தைச் சிறிது ஆராய்ந்து பார்க்கவேண்டும். ஆழ்வார் தாம் திருமணங்கொல்லையில் வயலாலி மணவாளன் பக்கலில் திருவஷ்டாக்ஷரமஹாமந்த் ரோபதேசம் பெற்று அதன் பெருமையை முதற்பதிகத்தினால் அருளிச் செய்து, அந்தத் திருமந்திரம் விளைந்தது ஸ்ரீபதரிகாச்ரமத்திலேயாதலால் தாம் அங்கேறச் சென்று

மங்களாஶாஸனம் செய்யத்திருவுள்ளம் பற்றி வடதிசை நோக்கிச்சென்று பதரிகாஶ்ரமம் சாளக்கிராமம் நைமிஶாரண்யம் ஸேவித்து, அங்கிருந்து இந்தப்ராந்த மெழுந்தருளி, சிங்கவேள் குன்றம் திருவேங்கடமலையளவில் வடநாட்டுத்திருப்பதி மங்களாஶாஸனத்தை முடித்தருளி, பிறகு தொண்டை நாட்டுத்திருப்பதிகளைத் திருவெவ்வுளூர் முதலாக (கச்சிப்பரமேச்சுர விண்ணகரத்தளவாகப்பாடி, நடுநாட்டுத்திருப்பதிகளான திருக்கோவலூரையும் திருவயிந்திரபுரத்தையும் பாடி, அதன்பிறகு சோழநாட்டுத்திருப்பதிகளைப் பாடத்தொடங்கித் தில்லைத்திருச்சித்திர கூடம், காழிச்சீராம விண்ணகரம் திருவாலிதிரு நகரி திருநாங்கூர்ப்பதினொரு திருப்பதிகள் திருவிந்தளூர் திருவெள்ளியங்குடி புள்ளம் பூதங்குடி, (கூந்தல் கமழுங்) கூடலூர் ஆக இத்திருப்பதிகளைமட்டுமே அனுபவித்து (சோழநாட்டுத்திருப்பதிகள் மற்றவற்றை விட்டிட்டு) அங்கிருந்து நேராகத் திருவெள்ளறைக் கெழுந்தருளித் திருவரங்கம் பெரிய கோயிலையும் (அப்பக்குடத்தான் ஸன்னிதி யென்கிற) திருப்பேர் நகரையும் மங்களாசாஸனம் செய்தருளி, அங்கிருந்து தென் திசைநோக்கிச் செல்லாமல் மீண்டும் வடதிசைநோக்கி யெழுந்தருளி திருக்குடந்தை ப்ராந்தத்திலுள்ள நந்திபுரவிண்ணகர மென்கிற நாதன் கோயில், திருவிண்ணகர் (ஒப்பிலியப்பன் ஸன்னிதி), திருநறையூர், திருச்சேறை, தேரழுந்தூர், சிறுபுலியூர், திருக்கண்ணமங்கை, திருக்கண்ணபுரம், திருக்கண்ணங்குடி, திருநாகை-என்னுமிந்தச் சோழநாட்டுத்திருப்பதிகளை மங்களாசாஸனஞ் செய்து, பிறகு பாண்டிநாட்டுக் கெழுந்தருளியிருக்கிறார். இங்ஙனே அடைவுமாறி யிருப்பதற்குக் காரணமென்ன வென்று ஆராயவேணும்.

இங்குப் பெரியார் ஸாதிப்பதாவது, இவ்வாழ்வார் புள்ளம் பூதங்குடியருகே யெழுந்தருளியிருக்கும்போது ஸ்ரீரங்கநாதனிடமிருந்து ப்ராகாரகோபுர மண்டபாதி நிர்மாணத்திற்காக திவ்யாஜ்ஞாஶாஸநம் கிடைத்தது; அதனால், க்ரமப்ராப்தங்களான பல திருப்பதிகளை விட்டிட்டு நேராகத் திருவரங்கம் பெரியகோயில் நோக்கி யெழுந்தருளும் படியாயிற்று. அங்கே சிலவாண்டுகள் எழுந்தருளியிருந்து திருப்பணிகளை *ஜிதபாஹ்ய ஜிநாதி மணிப்ரதிமா அபி வைதிகயந்திபொ ரங்கபுரே, மணிமண்டபவப்ர கணாந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந்* என்று (ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே) பட்டர் அருளிச்செய்யும்படி தலைக்கட்டியருளி, பின்பு முன்விட்ட விடத்திலிருந்து திவ்யதேஶமங்களாஶாஸனம் செய்தருளும்-படியாயிற்று-என்று பெரியார் பணிக்கக் கேட்டிருக்கை. இதற்கு ஸூசகமாகத் திருநெடுந்தாண்டகத்திலே* ஒருகையில் சங்கொருகை மற்றாழியேந்தி உலகுண்ட பெருவாயரிங்கே வந்து, என்பொருகயற் கண்ணீரரும்பப் புலவிதந்து புனலரங்கமூரென்று போயினாரே* பொன்னலர்ந்தநறுஞ்செருந்திப் பொழிலினூடே புனலரங்கமூரென்று போயினாரே* என்னுமிரண்டு பாசுரங்கள் காணலாம்.

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ராமாநுஜ தீபம்

(ஸ்ரீமதுபயவே. D. ராமஸ்வாமி ஐயங்கார், சென்னை அட்வகேட்)

ராமாநுஜ தீபம் என்னும் சொற்றொடர் பல பொருள்களைத் தரவல்லது, ராமாநுஜன் எனும் தீபம், ராமாநுஜன் ஏற்றிவைத்த தீபம் என்பனபோன்று, ''வேதாந்த தீபம்'' எனும் ப்ரஹ்மஸூத்ர ஸங்க்ரஹ பாஷ்யம் ராமாநுஜன் ஏற்றியதீபம். ராமாநுஜ

னையே, (யதிராஜனையே) ஒரு தீபமாக வர்ணிக்கிறுர் ஸ்வாமி தேசிகன் யதிராஜ ஸப்ததி 5ேவது ச்லோகத்தில்,

"நிராலோகே லோகே நிருபதி பர ஸ்நேஹ பரிதோ
யதிக்ஷ்மாப்ருத்தீபோ யதி ந கில ஜாஜ்வல்யத இஹ,
அஹங்கார த்வாந்தம் விஜஹதி கதங்காரமநகா:
குதர்க்க வ்யாளௌகம் குமதி மத பாதாள குஹரம்."

(ப்ரகாசமற்ற, அதாவது இருள் சூழ்ந்த, இவ்வுலகத்தில் இயற்கையான பகவத்பக்தி நிறைந்த (சுத்தமான, அழுக்கற்ற, எண்ணெய் நிரம்பிய) யதிராஜரெனும் தீபம் தன் ஒளியை நாற்றிசையும் பரப்பி ப்ரகாசிக்காமல் இருக்குமேயாயின், அஹங்காரமெனும் பரந்த இருள் சூழ்ந்ததாய், குயுக்திகளாகிய (துர்வாதிகளாகிய) துஷ்டர்கள் நிரம்பிய துர்ப்புத்திகளான பிறர் மதங்களாகிய ஆழமான (பாதாளம் போன்ற) பள்ளத்தைக் குற்றமற்ற அறிவாளிகள் எப்படி அறிந்து அதினின்று விலகுவார்கள்?)

யதி க்ஷ்மாப்ருத்தீபம்=யதிராஜனெனும் தீபம். க்ஷ்மாப்ருத்தீபம்=மலைமேல் வைத்த தீபம், குன்றிலிட்ட விளக்கு க்ஷ்மாப்ருத் = அரசன்; மலை). மலைமேல் வைக்கப்பட்ட தீபம் எப்படி நாடெங்கும், நாற்புறமும் ஒளிவீசி இருளை அகற்றுமோ அப்படி இந்த ராமாநுஜ தீபம் இருள் சூழ்ந்த இவ்வுலகத்தின் இருளை அகற்றி மக்களுக்கு ஒளி பயக்கிறது. அதனுல் மேடு பள்ளங்களெல்லாம் நன்கு விளங்குகின்றன. மேட்டில் தடுக்கி விழாமலும், பள்ளத்தில் விழுந்து விடாமலும் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளப் பயன்படுகிறது.

அப்படியே இந்த யதிராஜதீபம் பேருதவி புரிகிறது அறிஞர்களுக்கு. யதிராஜனுடைய உபதேசங்களாலும், உலக பொக்கிஷங்களான க்ரந்தங்களாலும் அஹங்காரமெனும் இருளை அறவே அகற்றிவிடுகின்றது இந்த தீபம் என்று பாடுகிறுர் அமுதனுர் இராமாநுச நூற்றந்தாதி 59ம் பாசுரத்தில்;—

"மிக்க நான்மறையின் சுடரொளியால்
அவ்விருளைத் துரந்திலனேல் உயிரையுடையவன்
நாரணனென்று அறிவாரில்லை உற்றுணர்ந்தே"

இந்தப் பாசுரத்தின் கருத்துதான் ஸ்வாமி திருவுள்ளத்திலோடுகிறது.

அமுதனுர் "கடலளவாய திசையெட்டினுள்ளும் கலியிருளே
மிடைதருகாலத்து, இராமானுசன் மிக்க நான்மறையின்
சுடரொளியால் அவ்விருளைத் துரந்திலனேல்"

என்றவிடத்து ஸ்வாமி தேசிகன் யதிராஜதீபம் ஜாஜ்வல்யமாக ப்ரகாசிக்காவிடில்; என்று அருளிச் செய்கிறுர்.

அஹங்காரம் குலைந்து "நான் எனக்குரியேனல்லேன்; நாரணனுக்கே உரியவன்" என்ற ஜ்ஞானம் உதித்தபிறகும் பிற மதங்களாகிய படுகுழிகளில் விழாமல் தப்பவேண்டுமே? அதை நல்லமுறையில் யதிராஜ தீபவொளி செய்து வைக்கிறது. குதர்க்கமென்னும் பாம்பும், புலியும் மலிந்து கிடக்கும் ஆழ்ந்த பள்ளத்தில் விழாமல் நம்மைக் காப்பது யதிராஜ தீப ஒளிதான். அந்தப் பள்ளம் அகாதம். அதன் வாய் மிக விரிவு. பரப்ரஹ்மமே அதில் விழுந்து தபிக்குங்கால் நம்மிராமானுசன் தானே

அதைக் கைபிடித்துத் தூக்கிக் கரையேற்றியருளினர். யதிராஜ ஸப்ததி 38-வது ச்லோகத்தில் இந்தப் பெருமையைப் பாராட்டி இராமானுசனுக்குப் பல்லாண்டு பாடுகிறார் ஸ்வாமி தேசிகன். "குத்ருஷ்டி குஹநா முகே நிபதத: பரப்ரஹ்மண: கர க்ரஹ விசக்ஷணோ ஜயதி லக்ஷ்மணோ:யம் முநி:" என்று. அப்படியிருக்க நம் கதியென்ன யதிராஜ தீபம் சுடரொளி வீசாவிடில்!

"நிருபதி பரஸ்நேஹ பரித:" என்றது இந்த ச்லோகத்தில் ரஸமான பாகம். தீபத்துக்கு எண்ணெய் வேண்டுமே? இந்த தீபம்—யதிராஜ தீபம்—எந்த எண்ணெயால் எரிகிறது? நிருபாதிகமாக எம்பெருமானிடத்தில் எம்பெருமானார் வஹித்த அளவு கடந்த பக்தியே. [ஸ்நேஹம்—பக்தி, எண்ணெய்]. பரனிடத்தில் இராமானுசன் கொண்ட அளவு கடந்த காதலே. இவ்வாசார்யர் வேண்டிப் பெற்றது வெறும் ஞானமல்லவா? பக்தி ரூபாபன்ன ஜ்ஞானமேயன்றோ? சேமுஷீ பக்தி ரூபா. அந்த அளவு கடந்த பக்திதான் இந்த ராமானுஜ தீபத்துக்கு நெய்.

ராமானுஜ சப்தத்துக்கு வேறு பொருளும் கொள்ளலாம். ராமாவதாரத்தில் ராமானுஜர்கள் மூவர். பரதன், லக்ஷ்மணன், சத்ருக்னன்; க்ருஷ்ணாவதாரத்தில் பலராமாநுஜனாகத் தோன்றிய கண்ணபிரானும் இராமானுசனே. இதை ஸ்வாமி தேசிகன் யதிராஜ ஸப்ததியில் அழகாக அனுபவிக்கிறார்.

சமிதோதய சங்கராதி கர்வ: ஸ்வபலாதுத்ருத யாதவப்ரகாச:,
அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜ: ஸ ஏஷ பூய:. (13)

சங்கரர் போன்றவர்களது பெருமையை யடக்கி, தன் பெருமையால் யாதவப்ரகாசரை அல்லது யாதவ வம்சத்தைப் பெருமைப்படுத்தியவரும், பார்த்தனல்லாதவர்களை [கௌரவர்களை] இல்லை செய்து, அல்லது வேதத்தின்மேல் ஏற்றப்பட்ட தப்பு அர்த்தங்களை நிராகரித்தும் ஆகிய இம் மூன்று ஒற்றுமைகளாலும் அதே கண்ணபிரான் தான் மறுபடி இந்த இராமானுசனாகத் தோன்றியவர்.]

கண்ணபிரானாகிய ராமானுஜன் ஏற்றிய தீபம் பகவத்கீதை. இதையும் ஸ்வாமி தேசிகனே தயாசதகம் 89-வது ச்லோகத்தில் நமக்குக் காட்டித் தந்திருக்கிறார். தயையை விளித்து "நீதானே உலக இன்னல்களைத் துடைப்பதற்கு எம்பிரானைக் கண்ணபிரானாக அவதரிக்கச் செய்து அவர் மூலம்

"நிராக்ருதவதீ தயே நிகம ஸௌத தீப ச்ரியா
விபச்சிதவிகீதயா ஜகதி கீதமாந்தம் தம: ||"

இந்தக் கீதையெனும் தீபம் ப்ரகாசிப்பது நிகம ஸௌதத்தில்—அதாவது வேதத்தின் உப்பரிகையின்மேல். வேதத்தின் உச்சி உபநிஷத், உபநிஷத்தின் உச்சியில் நின்று ப்ரகாசிப்பது பகவத்கீதை. "பகவத்கீதாஸு உபநிஷத்ஸு" என்றுதானே படனம் பண்ணுகிறோம்.

[3] பரதன் தூண்டிவிட்ட பாதுகா தீபம்:—

ஸ்ரீமத் பாதுகா ஸஹஸ்ரத்தில் பின்வரும் ச்லோகம் திகழ்கிறது.

ஸ்நேஹேந தேவி! பவதீம் விஷயேபிஷிஞ்சந்
த்விஸ்ஸப்தஸங்க்ய புவநோதர தீபரேகாம்,
ஜாதம் ரகூத்வஹ திவாகர விப்ரயோகாத்
அந்தம் தமிஸ்ரம் அஹரத் பரத: ப்ரஜாநாம். [192]

ஏழாவதான அபிஷேக பத்ததியில் 18ம் ச்லோகம் இது. சக்ரவர்த்தித் திருமகனுகிய ஸூர்யன் பிரிந்(மறைந்)ததனுல் உலகில் இருள் பரவியிருந்த பொழுது பரதன் கோஸல தேசத்தில் பாதுகையாகிற தீபத்தில் பக்தியாகிற எண்ணெயை நிரம்பப் பொழிந்து அதன்மூலம் அதைத் தூண்டி விட்டு அந்த இருளைப் போக்கினுன். பாதுகையை இங்கே 'தீபரேகா' என்று சொன்னதனுல். மெலிந்த சுடருடன் பாதுகை காணப்பட்டதாகவும். அதை எண்ணெய் விட்டு நன்கு ப்ரகாசிக்கும்படி பரதன் செய்தான் என்றும் சொல்லியிருக்கிறது. ராமன் காட்டுக்கு எழுந்தருளின பிறகே பரத மஹிமை உலகிலே பரவியது என்ற உண்மையும் தெரிவிக்கப்படுகிறது. 'ஸ்நேஹம்' என்பதற்கு அன்பு என்றும். 'எண்ணெய்' என்றும் பொருள். தீப விஷயத்தில் எண்ணெய். பாதுகை விஷயத்தில் அன்பு. பக்தி. பரதனுடைய பாதுகா பக்தி ப்ரஸித்தமன்றோ? பரத பக்தியால் பாதுகையின் ப்ரகாசம் அதிகரித்துப் பதினுன்கு உலகங்கள் முழுவதிலும் சுடர் விட்டு ஒளி வீசியது என்ற உண்மை இந்த ச்லோகத்திலிருந்து தெரிகிறது. இது பரதனுகிய ராமானுஜன் தூண்டி விட்ட தீபம்.

(4)ஸூர்யன் இல்லாத போது விளங்கிய தீபமாகப் பாதுகை கூறப்பட்டபடியால். அது வெளியிருளை நீக்கிய தீபம் என்றும். பகவத் கீதையாகிய தீபம் வேதத்துக்கே விளக்கானமை கூறப்பட்டபடியால். இங்கே போக்கப்பட்டது உள்ளிருள் என்றும் ஒருவாறு கொள்ளலாம். ... ... ... *

# பெரியாரின் பரமபதப்ராப்தி

சின்ன காஞ்சீபுரம் வடவண்டை மாடவீதியில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே· திருமலை. அனந்தாண்பிள்ளை—மடவளாகம்—கோபாலாசாரியர் ஸ்வாமி நிகழும் மார்கழி மாதம் சுக்ல சதுர்தசி வெள்ளிக்கிழமையன்று (23—12—77) தமது திருமாளிகையில் திருநாடலங்கரித்தார். சிலவாண்டுகளாகவே அசக்தியின் மிகுதியினுல் சயனத்திலேயேயிருந்தார். எழுபத்தெட்டு பிராயம் நிரம்பினவர். இவர் ஐம்பது ஸம்வத்ஸரகாலம் தேவப்பெருமாளுக்கு இடையருமல் அருளிச்செயல் கைங்கரியம் செய்து போந்தவர். இவருடைய மாமனுர் கீர்த்திமூர்த்தியான ஸ்ரீஉவே. தி. ந. ச. தேசூர்- ரங்கஸ்வாமி ஐயங்கார் போலவே இவரும் *வல்லரெனவல்லவராக விளங்கியதோடு கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தில் தலைசிறந்திருந்தார். இந்த ஸ்வாமிக்கு இரண்டு திருக்குமாரர்கள்—ஸ்ரீ கண்ணன் என்கிற T. A. வெங்கடவரதாசாரியரும். பாஷ்யமையங்காரும். இருவரும் திருத்தகப்பனுரைப்போன்று யோக்யதைபெற்று சென்னையில் ப்ரதிஷ்டிதராய் விளங்கி வருகின்றனர். இவர்களின் குடும்பத்திற்கு மங்களாசாஸனம் செய்கிறோம்.

**மற்றொரு [illegible]**. காஞ்சியில் ஸ்ரீயதோக்தகாரி ஸன்னிதி தர்மகர்த்ரு குடும்பத்தைச்சேர்ந்தவர்களில் ஒருவரும் மிகச்சிறந்த அத்யாபகருமான ஸ்ரீமதுபயவே நல்லப்பா. நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி நிகழும் மார்கழி மாதத்திலேயே (27-12-77) ஹ்ருதயகோசதைதில்யத்தினுல் அநாயாஸமாகத் திருநாடலங்கரித்தார். இவர் சென்னையில் உத்யோக பதவியில் வாழ்பவர். ஸ்ரீயதோக்தகாரி ஸன்னிதியில் திருவத்யயநோத்ஸவத்தை நிர்வஹிப்பதற்காக விராமம் பெற்றுக் காஞ்சிக்குவந்து பகற்பத்து பூர்த்தியாக அருளிச்செயல் கைங்கர்யத்தை அற்புதமாக நடத்தி இராப்பத்திலும் நிர்யாணபர்யந்தம் கைங்கர்ய நிஷ்டிதராயிருந்து பரமபதித்தாரென்பது சோசநீயமென்பதோடு விஸ்மயநீயமாகவுமுள்ளது. இவருடைய குடும்பத்திற்கு நம்முடைய அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். ... ... •